Registered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 34—No. 12



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ மார்கழி 1961 டிசம்பர் | இதழ் 1

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி
சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4
ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

## சமாஜப் பொதுக்கூட்டம்

சென்னை மயிலாப்பூர், கிழை மாட வீதியிலுள்ள சமாஜ அலுவலகத்தில், 23-12-61 சனிக்கிழமை காலை 9½-மணிக்குச் சமாஜ ஆண்டு அறிக்கையையும் இவ்வாண்டு வரவு செலவுக் கணக்குகளையும் ஆமோதிக்க நடைபெறும். அக்கூட்டத்திற்கு அங்கத்தினர் நிறைவெண் (Quorum) இல்லாவிடில் மேற்படி விஷயங்களை ஆமோதிக்க மேற்படி இடத்திலேயே மறுநாள் 24-12-61 ஞாயிறு காலை அதே நேரத்தில் சமாஜ விதிகளின்படி, வருபவர்களைக் கொண்டு அக்கூட்டம் நடத்தப்படும்.

---

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

1962 ஆண்டு சமாஜ அங்கத்தினர்கள் தங்களுடைய சந்தாவை 31-12-1961-க்குள் தயவு செய்து அனுப்பிவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன். 1962 ஜனவரி மாதம் வி. பி. பி.யில் சித்தாந்தம் அனுப்புவதால் பல அங்கத்தினர்களுக்கு 67 புதுக்காசு அதிகமாகக் கட்டணத்துடன் கொடுக்கவேண்டி வருவதாலும், மற்றும் சிலருக்கு வருத்தம் ஏற்படுவதாலும், முன்னதாக அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் சந்தாவை அனுப்பி விடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

மணியார்டர் மூலமாகச் சந்தாவை அனுப்பும் அன்பர்கள் கூப்பனில் குறிக்கவேண்டிய முக்கிய விஷயங்கள் : 1. சந்தா எண். 2. சந்தாதாரர் பெயர். 3. தெளிவான தற்போதைய தபால் முகவரி. 4. பல சந்தாதாரர்கள் ஒரு மணியார்டர் மூலம் மொத்தமாகப் பணம் அனுப்பினால் அவரவர்கள் சந்தா எண், பெயர், விலாசம் தனித்தனியே கூப்பனில் எழுதியனுப்பவும். பணம் அனுப்பவேண்டிய முகவரி : செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம், 67, லாயிட்ஸ் ரோடு, இராயப்பேட்டை, சென்னை-14.

மலாய் நாட்டில் உள்ள சமாஜ உறுப்பினர்கள் தங்களுடைய சந்தாக்களைத் திரு. கே. இராமநாதஞ் செட்டியார், பி. ஏ., பி. எல். அவர்களிடத்தேனும், திரு. சிவநேயன் அவர்களிடத்தேனும் செலுத்திவிடலாம். —செயலாளன்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை

[பதிவு செய்யப்பெற்றது]

# 56-ஆம் ஆண்டுவிழாவும் மாநாடும்

இடம் : **பழனி**

நாட்கள் : **30, 31-12-61, 1-1-62**

# அறிக்கையும் அழைப்பும்

"ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே!"

பேரன்புடையீர்!

உலகம் எங்கும் செந்நெறி திகழ்வதற்காகச் சைவ சமயத்தின் பெருமையைப் பரப்பி வரும் நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் **56-ஆம்** ஆண்டு நிறைவு விழாவும், அதன் அங்கங்களாகச் சைவர், சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும், நிகழும் பிலவ ஆண்டு மார்கழித் திங்கள் 15-ஆம் நாள் (30—12—1961) சனிக் கிழமை முதல், மூன்று நாட்கள் பழனி அடிவாரம் வடக்குக் கிரி வீதியிலிருக்கும் ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி தேவஸ் தான கூடத்தில் நிகழ்ச்சி முறைப்படி நடைபெறும்.

பழனி - சைவசித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் மாநாட்டுக்கு எல்லோரையும் வரவேற்று ஆசியுரை கூறுவார்கள்.

மாநாட்டை, சென்னை மாநில அறநிலயத்துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் திறந்து வைப்பார்கள்.

சென்னை, தருமபுர ஆதீனச் சமயப் பிரசார நிலையத் தலைவர், வித்துவான் - ஒடுக்கம் - ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வாழ்த்துரை வழங்குவார்கள்.

ஆண்டு விழாவிற்கும் சைவர் மாநாட்டிற்கும் மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் - சித்தாந்த

கலாநிதி-திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் தலைமை தாங்குவார்கள்.

சைவ மங்கையர் மாநாட்டை, பழனி - திருமதி. க. ர. ஆதிலட்சுமி அம்மையார் அவர்கள் தொடங்கி வைப்பார்கள் ; அம் மாநாட்டிற்கு, மதுரை, மீனாட்சி சுந்தரேசர் கோயில் தருமகர்த்தர் - திருமதி. புஷ்பம் நடராஜன் அம்மையார் அவர்கள் தலைமை ஏற்பார்கள்.

சைவ இளைஞர் மாநாட்டை, மதுரை - திரு. கருமுத்து தி. சுந்தரம் செட்டியார், பி.காம். அவர்கள் துவக்கி வைப்பார்கள் ; அம் மாநாட்டிற்கு வாலாசாபாத்து இந்துமத பாடசாலை மேலாளர் திரு. நா. ப. தணிகை அரசு அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

அறிஞர் பெருமக்கள் மூன்று நாட்களிலும் சைவ சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள்.

சமாஜ அங்கத்தினர்களும், ஏனைய சைவ சமய அமைப்பினரும், சைவ அன்பர்கள் யாவரும், மூன்று நாட்களும் வந்திருந்து, உடனுறையும் பயனைக் கொண்டும் கொடுத்தும் சிறப்பிப்பதுடன், சமாஜத்தை வலுப்படுத்தும் ஆக்க வேலைகளுக்கும் அடிகோலி நலஞ்செய்ய வேண்டுகிறோம்.

இங்ஙனம் :

திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., சமாஜத் தலைவர்.
திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி.,
திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ., சமாஜத் துணைத் தலைவர்கள்.
ஜி. கலியாணம், எம்.ஏ., சமாஜச் செயலர்.
வித்துவான் - அம்பை - சங்கரனார், உதவிச் செயலர்.
வரவேற்புச் சபை : பழனி சைவ சித்தாந்த சபையினர்

---

## நிகழ்ச்சி நிரல்

முதல்நாள் : மார்கழி 15உ (30-12-61) சனிக்கிழமை
முற்பகல் : காலை 7 மணிமுதல் 12 மணிவரை

சைவர் மாநாடு

வழிபாடு : திருவாவினன்குடிக் கோயில்
இறைவணக்கம்
வரவேற்புரை : சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார்
திறப்புரை : திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்.
வாழ்த்துரை : ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்
தலைமையுரை : சித்தாந்த கலாநிதி-திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை

பிற்பகல் : மாலை 4 மணிமுதல் இரவு 8 மணிவரை

**சொற்பொழிவுகள் :**

1. தவத்திரு ஐயாறு அடிகள், இலஞ்சி
**—திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சிக் குறிப்புக்கள்**
2. திருமதி. அ. கு. காமாட்சி அம்மையார், எம்.ஏ., அரசினர் கல்லூரி, சேலம் **—சித்தர் கண்ட சித்தாந்தம்**
3. திரு. அ. கி. பரந்தாமனார், எம்.ஏ., தியாகராசர் கல்லூரி, மதுரை **—சங்க நூல்களில் சமயம்**

இரவு : 9 மணிமுதல் 11 மணிவரை

**நாடகம் : " மங்கையர்க்கரசியார் "—பழனி தேவார வகுப்பு மாணவ மாணவிகள்.**

---

**இரண்டாம் நாள்: மார்கழி 16வ (31-12-61) ஞாயிற்றுக்கிழமை**

முற்பகல் : காலை 8 மணிமுதல் 12 மணிவரை

**சைவ மங்கையர் மாநாடு**

இறைவணக்கம்

தொடக்கவுரை : **திருமதி. க. ர. ஆதிலட்சுமி அம்மையார்**

தலைமையுரை : **திருமதி. புஷ்பம் நடராஜன் அம்மையார்**

சொற்பொழிவுகள் :

1. வித்துவான் - திருமதி சிவகாமி மணிமுத்து, தமிழ் ஆசிரியை, பங்கயம் உயர்நிலைப்பள்ளி, போடி நாயக்கனூர் **—சைவம் வளர்ந்தது யாரால்?**
2. திருமதி. இராஜேசுவரி சுவாமிநாதன், சிதம்பரம்
**—வழிபாடு**
3. புலவர் - திருமதி. சி. குழந்தையம்மாள், எம்.எல்.ஏ., கோவை. **—என்றும் இளையாய் அழகியாய்**

பிற்பகல் : 2 மணிமுதல் 4 மணிவரை

உறுப்பினர் பொதுக்கூட்டம், தீர்மானங்கள் நிறைவேற்றல், சமாஜப் பணியாளர் தேர்வு.

மாலை 4 மணிமுதல் இரவு 8 மணிவரை

**சைவர் மாநாடு**

1. வித்துவான் - திரு. கு. நடேச கவுண்டர், பி.ஓ.எல்., முதல்வர், சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரி, பேரூர்
**—தேனூறும் வாசகங்கள்**
2. திரு. பி. ஆர். சுவாமிநாதன், எம்.ஏ., எல்.டி., தலைமை ஆசிரியர், ஆர். சி. டி. உயர்நிலைப்பள்ளி, சிதம்பரம்
**—மருள் நீக்கியார்**
3. புலவர் - திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., விரிவுரையாளர், கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்
**—அருள் நந்திசிவம்**

இரவு : 9 மணிமுதல் 11 மணிவரை

**நடனம் : ஈரோட்டுச் சிறுமியர் மூவர்**

மூன்றும்நாள் : மார்கழி 17உ (1-1-1962) திங்கட்கிழமை

முற்பகல் : காலை 8 மணிமுதல் 12 மணிவரை

## சைவ இளைஞர் மாநாடு

இறைவணக்கம்

தவக்கவுரை : திரு. கருமுத்து தி. சுந்தரம் செட்டியார், பி.காம்.

தலைமையுரை : திரு. நா. ப. தணிகை அரசு

சொற்பொழிவுகள் :

1. வித்துவான் - திரு. வி. சிவக்கொழுந்து, தலைமைத் தமிழ் ஆசிரியர், உயர்நிலைப்பள்ளி, பெரியகுளம் —திருவாசகம்
2. வித்துவான் - திரு. தி. கி. சுந்தரமூர்த்தி, தலைமைத் தமிழ் ஆசிரியர், தியாகராசர் நன்முறை உயர்நிலைப் பள்ளி, மதுரை —சேக்கிழாரும் தேவாரமும்
3. திரு. எம். நடராஜன், எம்.ஏ., பி.ஓ.எல்., விரிவுரையாளர், ஸ்ரீ பழனியாண்டவர் கீழ்க்கலைக்கல்லூரி, பழனி. —சைவத்தின் தொன்மையும் சமரசமும்

பிற்பகல் : 2 மணிமுதல் 4 மணிவரை ஆராய்ச்சிக்குழுக் கூட்டம்

மாலை 4 மணிமுதல் இரவு 8 மணிவரை

## சைவர் மாநாடு

1. வித்துவான் தவத்திரு. இராமசாமி அடிகள், சாந்தலிங்க சுவாமிகள் மடம், பேரூர் —வீரசைவம்
2. திரு. மு. அருணாசலம், எம்.ஏ., திருச்சிற்றம்பலம் —சைவ சித்தாந்தம் 14, 15-ஆம் நூற்றாண்டுகள்
3. திரு. எஸ். ஆறுமுக முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்., எல்.டி., முதல்வர், ஸ்ரீ பழனியாண்டவர் கீழ்க்கலைக் கல்லூரி, பழனி —திருக்குறளும் சமயமும்

தலைவர் முடிவுரை

வரவேற்புச் செயலர் - சமாஜச் செயலர் நன்றியுரை.

கடவுள் வாழ்த்து

இரவு 9 மணிமுதல் 11 மணிவரை

வில்லுப்பாட்டு: "அப்பர் வரலாறு" பழனி-பள்ளிஆசிரியர்கள்

---

குறிப்பு :—(1) சமாஜத்தின் அங்கத்தினர்களுக்கு மட்டும் பழனியில் மாநாட்டு நாட்களில் உணவுக்கும் உறைவிடத்துக்கும் ஏற்பாடு செய்யப்படும். ஏனையோர் மூன்று நாட்களுக்கும் உணவுக்கு நான்கு ரூபாய் செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம். உறைவிட வசதி விரும்பும் அங்கத்தினர் தம் வருகையை, பழனிச் சைவ சித்தாந்த சபைச் செயலருக்கு 25—12—61-க்குள் அறிவிக்க வேண்டும். முகவரி: 'திருவடி' அடிவாரம், பழனி. (2) மூன்று நாட்களிலும், திருமுறை, திருப்புகழ் முதலிய அருட்பாடல்கள் இடையிடையே பழனி தேவஸ்தான ஓதுவார் அவர்களால் ஓதப் பெறும். (3) பெரியபுராணம் முதலிய சமாஜ அடக்கவிலை நூல்கள் மாநாட்டுப் பந்தரில் கிடைக்கும்.

---

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4.

Reg. M. 2330

உ
சிவமயம்

சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

| மலர் 34 | பிலவ மார்கழி 1961 டிசம்பர் | இதழ் 12 |
|---|---|---|

# இலக்கணத்திற் கற்பனைகள்

(முருகவேள்)

(முற்றொடர்ச்சி : மலர் 34, இதழ் 11, பக்கம் 384)

## அடைமொழிகள்

நாம் வழங்கும் அடைமொழிகள், ஒரு பொருளைப் பற்றி நாம் பெற்றுள்ள அறிவு அனுபவங்களைப் புலப் படுத்துவனவாக உள்ளன. ஒரு மனிதனின் நுண்ணறிவை அளந்தறிவதற்கு அவன் கையாளும் அடைமொழிகளே ஒரு வகையிற் கருவிகளாகின்றன*. 'நீ பயன்படுத்தும் அடைமொழிகளைப் பொறுத்தே, நின்னைக் குறித்து உலகம் ஒரு முடிவு கொள்ளும்'† என அறிஞர்கள் கூறுவர். 'திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும் பொருளும் அதனினூங் கில்' என ஆசிரியர் திருவள்ளுவர் அருளிச் செய்தபடி, அடைமொழிச் சொற்களை நாம் திறனறிந்து பயன்படுத்துதல் வேண்டும். கபிலர் என்னும் சங்ககாலப் புலவர் தாம்பாடிய குறிஞ்சிப்பாட்டு என்னும் நூலின்கண், பல்வேறு மரஞ் செடி கொடி மலர்களுக்கும் அவ்வவற்றிற் கேற்ற அடைமொழிகளைத் திறன் தெரிந்து வழங்கி யிருத்தல், அறிந்து மகிழற்பாலது.

* "The choice of adjectives is a fine test of a man's originality."

† "By your adjectives shall you be judged."

அடைமொழிகள் பொதுவாக இருதிறப்படும் என வாம். ஒரு சில அடைமொழிகள், ஒரு பொருளை அதன் இனமாய பொருள்களினின்று பிரித்துக் காட்டும். வேறு சில அடைமொழிகள் அங்ஙனம் செய்யாமல் தாம் அடுத்து வரும் பொருள்களின் இயல்பினை இனைத்தென்று உணர்த்தி நிற்கும். இவ்விருதிற அடைமொழிகளையும் முறையே அந்நிய யோக வியவச் சேதம் எனவும், அயோகவியவச் சேதம் எனவும் வடநூலார் வழங்குவர் (பிரயோக விவேகம் : 49).

சிவஞானபோதவுரையில் ஆசிரியர் சிவஞான சுவாமிகள் "அந்நியயோக வியவச் சேதம் அயோகவியவச் சேதம் என்றற்றொடக்கத்து வடசொற்கள், பிறிதின் இயைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதல் என்றற் றொடக்கத்தனவாக வழங்கப்படுமாறுபோல, சமவாயம் என்னும் வடமொழி தமிழின்கண் நீக்கமின்றி நிற்றல் என மொழி பெயர்த்து வழங்கப்படும்" என விளக்கம் செய்திருத்தல் ஈண்டு அறியற்பாற்று.

ஆசிரியர் சேனாவரையர் "இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து. வெண்குடைப் பெருவிறல் என்றவழிச் செங்குடை முதலிய வற்றோடு இயைபு நீக்காது, வெண்குடையோடு இயை பின்மை மாத்திரை நீக்கி வெண்குடையான் என்பது பட நிற்றலின், அஃதியைபின்மை நீக்கலாம். கருங்குவளை என்ற வழிச் செம்மை முதலாயினவற்றோடு இயைபு நீக்கலின், இது பிறிதினியைபு நீக்கலாம்" எனப் 'பன்மை சுட்டிய பெயர்' (தொல். சொல் : 112) குறித்து விளக்குங்காற் கூறியருள்வர்.

ஈண்டு நாம் பொதுவாகச் செந்தாமரை வெண்டாமரை என்றாற் போல்வன இனங் குறிக்கும் அடைமொழிகளாம் என்றும், செஞ்ஞாயிறு வெண்டிங்கள் என்பன இனங் குறியாது இயல்பு குறிக்கும் அடைமொழிகளாம் என்றும் கொள்ளுதல் தகும். ஆசிரியர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமது பாடல் ஒன்றில், நாம் இனங் குறிக்கும் அடைமொழி எனக் கொள்ளுவதனை, இனங் குறியாது இயல்பு குறிக்கும் அடைமொழி யென்று கற்பனைச் சுவை வமையக் கட்டுரைக்கின்றார்.

" மற்றின்பம் உண்டென்ப தன்றால் இவள்தர வந்தஇன்பம்
சிற்றின்பம் என்பது, தென்வெங்கை வாணர் திருநடனம்
உற்றின்பம் செய்யும் சிதாகாசம் தன்னை யுணர்வுடைமை
பெற்றின்பம் எய்தினர் சொல்வர், சிற்றம்பலப் பேர்புனைந்தே "

'இத் தலைவியின் இடத்தில் யான் பெற்ற இன்பம் பேரின்பமே யாகும். சான்றோர்கள் இதனைச் 'சிற்றின்பம்' என வழங்குவது 'ஞான இன்பம்' என்னும் கருத்துப் பற்றியே யாதல் வேண்டும். அதனைச் 'சிற்றம்பலம்' என்னும் தொடர், தன்னிற் சிறந்த பேரம்பலம் பிறிதொன்று உண்டெனக் குறியாது 'ஞான அம்பலம்' எனவே பொருள் கொள்ளுமாறு அமைந்து திகழ்தல் கருதியுணரலாம்' எனத் தற்குறிப் பேற்றம் அமையத் தலைவன் "புணர்ச்சியின் மகிழ்தல்" ஆகக்கூறும் முறையில் இயன்றது இச்செய்யுள். ஞானத்தைக் குறிக்கும் 'சித்' எனும் வடசொல், தமிழில் 'சிற்' எனச் சிதைந்து வந்தது என்பது குறிப்பு.

## இலக்கணை

ஒரு மொழியின்கண் உள்ள சொற்களையெல்லாம் வாசகம் லக்ஷகம் வியஞ்சகம் எனத் தருக்க நூலார் மூவகையாகப் பிரிப்பர். இவற்றையே அலங்கார நூலார் அபிதை இலக்கணை வியஞ்சனவிருத்தி என வேறு பெயர்களால் வழங்குவர் எனப் பிரயோக விவேகம் (49) கூறும். நன்னூல் (269) விருத்தியுரையுள் "வட நூலார் சொற்பொருளை வாச்சியம் வியங்கியம் இலக்கணை என மூன்று எனவும், இலக்கணையை வியங்கியத்துள் அடக்கி இரண்டெனவும் கூறுப. இவற்றுள் வாச்சியம் என்பது வெளிப்படை. வியங்கியம் என்பது குறிப்பு. இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது" என வருதலுங் காணலாம். ஆசிரியர் பரிமேலழகர் 'சொல்லின் தொகையறிந்த தூய்மையவர்' (711) என்புழிச் "சொல்லின் தொகை எனவே செஞ்சொல் இலக்கணைச்சொல் குறிப்புச்சொல் என்னும் மூவகைச் சொல்லும் அடங்கின" என எழுதியிருத்தலும் கருதற்பாலது.

இலக்கணையாவது, பெயராக வினையாக நிற்கும் சொற்கள் தத்தம் பொருளை உணர்த்தாமல், பொருளின் சம்பந்தப்

பொருளையும் தாற்பரியப் பொருளையும் அறிவித்து நிற்றல். அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூன்று வகைப்படும். 'வைகலும் பூங்கழி வாய் வந்து மேயுங் குருகினங்காள் கைகள் கூப்பிச் சொல்லீர்' என்புழிக் குருகுகளுக்குக் கைகளும் கூப்பிச் சொல்லும் தன்மையும் இன்மையின், அது விட்ட இலக்கணை எனப்படும். 'கங்கையின் கண் இடைச்சேரி' என்புழி இடைச்சேரி கங்கைக் கரையின்கண் இருத்தல் பெறப் படுதலின், அது விடாத இலக்கணையாகும். 'பாயிருள் பருகிப் பகல் கான்று எழுதரும் பல்கதிர்ப் பருதி' என்புழி இருளைப் பருகுதலும் பகலைக் கான்றலும் பருதிக்கு இல்லை யாயினும், இருளைப் போக்கிப் பகலைத்தருதல் பருதிக்கு இயல்பாகலின், அது விட்டும் விடாத இலக்கணை என்பர். இவற்றுள் விட்ட இலக்கணை என்னும் இலக்கணக் குறியீட்டினைப் பின்வரும் சேதபுராணச் செய்யுளில், நிரம்ப அழகிய தேசிகர் வழங்கி யிருத்தல் மனங்கொளற்பாலது.

"கட்டவிழ்ந்து பொலிகமலம் என்னஎரி
காமர் வேள்வியழல் முன்னரே
வட்டமா நிலம்வகுத்த தாதைஎன
மன்னும் மாதவர்கள் மலரின்மேல்
எட்டுவாள் விழிவிரிஞ்சன் வைகியிடும்
என்றிடும் பொருளை மன்றவே
விட்ட லக்கணையினால் உணர்த்திடுவர்
வேறு கூறுவதென் மேன்மையே."

நைமிசாரண்யத்தில் நிகழும் வேள்விகளின் சிறப்பையும், அவற்றை இயற்றும் அந்தணர்களின் சிறப்பையும் உணர்த்துவது இச்செய்யுள். தாமரை மலரில் நான்முகன் அமர்ந்திருத்தலை, வேள்வித்தீயின் முன்னர் அமர்ந்திருக்கும் அந்தணர்கள் உணர்த்தும் இயல்பினராக உள்ளனர் எனத் தீயொடு தாமரைக்கும் நான்முகனொடு அந்தணர்க்கும் இயைபுளதுபோலக் கூறப்பட்டிருப்பினும், உண்மையான் நோக்குழி அத்தகைய இயைபேதும் இலதாகலின், இது விட்ட இலக்கணை ஆயிற்று.

## எண்ணுப் பெயர்கள்

தமிழர்கள் பிறதுறைகளிற் போலவே கணிதத் துறையி லும் பண்டைக் காலத்திற் சிறந்து விளங்கினர். உலகின் ஒரு சில பகுதிகளில் உள்ள நாகரிகமற்ற மக்கட் கூட்டத் தினர் சிலர், இரண்டு அல்லது மூன்றுக்கு மேற்பட்ட எண்களை எண்ணத் தெரியாதவர்களாக இருந்து வருகின்ற னர். ஆனால் தமிழர்களோ மிகப் பழங்காலந் தொட்டே உலகத்துப் பொருள்களை யெல்லாம், எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் முறைகளால் அளந்தறியக் கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தனர். பொருள்களைப் பத்துப் பத்தாக எண்ணி நூறு ஆயிரம் நூறாயிரம் கோடி முதலியனவாகக் கணக்கிடும் பேரெண்களையும், முக்கால் அரை கால் அரைக்கால் மா (1/20) காணி (1/80) முந்திரி (1/320) என மிக நுணுகிப் பகுத்துக் கணக்கிடும் கீழ் வாயிலக்கங்களையும் தமிழக மக்கள் செவ்விதின் அறிந்திருந் தனர்.

" முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன் —விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரை இன் றேது "

எனவரும் காளமேகப் புலவர் பாடல், கீழ்வாயிலக்கங்களைச் சுவைமிகக் கிளந்தினிது கூறுதல் காணலாம். கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு என்னும் முகத்தலளவைப் பெயர்களும், கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா வரை அந்தை என்னும் நிறுத்த லளவைப் பெயர்களும் பண்டு தமிழில் வழங்கியிருந்தன (தொல் : 170).

பழங்காலத்தில் தமிழக மக்கள் வழங்கி வந்த எண்ணுப் பெயர்களுள், தாமரை வெள்ளம் ஆம்பல் என்னும் எண்ணுப் பெயர்கள் குறிப்பிடத் தக்கனவாகும்.

" ஐ அம் பல்என வருஉம் இறுதி
அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும் "

எனவரும் தொல்காப்பிய நூற்பாவும் (எழுத்து : 393),

" நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை"

எனவரும் பரிபாடல் (2 : 13-15) வரிகளும், அவற்றிற்கு "நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் கமலமும் வெள்ளமும் என என் குறித்திட்ட பெயர்களது அளவிற்றாகிய கால ஈட்டம்" எனவரும் பரிமேலழகர் உரைப் பகுதியும் இவ்வுண்மையைச் செவ்விதின் உணர்த்தும்.

இவ்வெண்ணுப் பெயர்களை இனிது குறிப்பிட்டு, வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகளார், தாம் இயற்றியருளிய இங்கிதமாலை எனப் பெயரிய அரும் பெரும் நூலில் அழகுறப் பாடுகின்றார் :

" சேடார் வளஞ்சூழ் ஒற்றிநகர்ச்
செல்வப் பெருமான் இவர்தமைநான்,
ஓடார் கரத்தீர் ! எண்டோள்கள்
உடையீர் ! என்?என் றுரைத்தேன்.
கோடா கோடி முகம்நூறு
கோடா கோடிக் களம்என்னே ?
ஈடாய் உடையாய் ! என்கின்றார்,
இதுதான் சேடி ! என்னேடீ ?"

திருவொற்றியூர்த் தியாகப் பெருமான் என் இல்லத்திற்குப் பலியேற்க வந்தார். அப்போது அவரை நான் : ' கபாலம் ஏந்திய கையை யுடையவரே ! எல்லோருக்கும் இரண்டு தோள்கள் மட்டுமே இருக்க, நீர்மட்டும் எட்டுத் தோள்களைக் கொண்டிருக்கின்றீரே ! அதற்குக் காரணம் யாது ? என வினவினேன். அதற்கு அவர், ' எனக்கு எட்டுத் தோள்கள் இருத்தல் பற்றி என்னை எள்ளனம் செய்கின்றனையே ! உனக்கு முகம் கோடாகோடியாகவும், கழுத்து நூறு கோடாகோடியாகவும் இருக்கின்றதே ! அதற்கு நீ யாது காரணம் சொல்வாய் ? என, யான் வினவியதற்கு மாறாகத் தாமும் என்னை வினவுகின்றார். தோழியே ! அவர் தம் கூற்றின் கருத்து யாதாக இருத்தல் கூடும் ? என்பது இச்செய்யுளின் பொருள்.

இதன்கண் கோடாகோடி, நூறு கோடாகோடி என்பன முறையே தாமரை சங்கம் என்னும் மிகப் பழைய தமிழ் எண்ணுப் பெயர்களைக் குறித்து வருதல் காணலாம். நின்முகம் தாமரை போலவும், கழுத்து சங்கு போலவும் அழகு பெற்றுத் திகழ்கின்றன என்பது கருத்து.

பழைய தமிழெண்ணுப் பெயர்களை நினைவு கூர்ந்து இங்ஙனம் சுவை மிகக் கற்பனை யமைத்துப் பாடிய இராமலிங்க அடிகளார் தம் அருமை பெருமைகளை, யாம் என்ன கூறி எங்ஙன் உணர்த்துவேம் ?

## முத்தகம், காவியம், சித்திரம்

அழகை விரும்பாதார் உலகத்தில் யாரும் இல்லை. 'அழகுப்பொருள் என்றும் அளவிலா இன்பப் பொருள்.'* எல்லாப் பொருள்களிலும் நாம் அழகை எதிர்பார்ப்பது போலவே, செய்யுட்களிலும் சிறப்பும் அழகும் இருத்தல் வேண்டும் என விரும்புகின்றோம். அதுபற்றியே "உணர் வினின் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்" என நன்னூலார் நவின்றருளினர். செய்யுட்களுக்கு அழகும் சுவையும் சிறப்பும் அளிக்கவல்ல அணி நலங்கள் இன்றி யமையாதன. "அணியிலாக் கவிதை பணியிலா வனிதை" என்பது பழமொழி.

செய்யுட்களுக்கு இன்றியமையாத சிறப்பிற்குரியன வாகத் திகழும் அணிகளையெல்லாம், ஆசிரியர் தொல்காப்பி யனார் உவமை யொன்றின் கண்ணேயே அடக்கி விளக்கி யருளினர். உவமையினின்றே ஏனைய பல அணிகளெல் லாம் ஏற்படலாயின என்பதனை,

"உவமை என்னும் தவலரும் விறலி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பரும் மகிழ்ச்சி பூப்பநடிக் கும்மே"

என வடநூலறிஞர்கள் சுவைபடக் கூறுமாற்றால் தெளி யலாம். இஃதெங்ஙனமாயினும், இற்றை நாளில் செய்யுட்

* "Athing of beauty is a joy for ever" —*John Keats*

களுக்குரிய அணிகளைக் குறித்து நூல்கள் பல தமிழில் உள்ளன. அவற்றுள் பெரிதும் தலைசிறந்தது தண்டியலங் காரம். அது காவியாதர்சம் என்னும் வடநூலைத் தழுவி இயற்றப் பெற்றதென்பர். அலங்கார நூல்களுள், 'முத்தகம்' 'குளகம்' 'காவியம்' 'சித்திரம்' எனக் கவிவகை களைப் பற்றிய குறியீடுகள் வழங்கும்.

செய்யுள் அல்லது கவிதைகள், முத்தகம் குளகம் தொகைநிலை தொடர்நிலை என நான்கு வகைப்படும். 'முத்த கச் செய்யுள் தனி நின்று முடியும்.' 'குளகம் பலபாட்டு ஒரு வினை கொள்ளும்.' ஒரு செய்யுளோடு மற்றொரு செய்யு ளுக்குத் தொடர்பு யாதும் இன்றித் தனித்தனியே ஒரு பொருளை உணர்த்தும் செய்யுட்கள்பல தொகுக்கப்பட்ட நூல், தொகைநிலைச் செய்யுள் எனப்படும். அது பொருள் இடம் காலம் தொழில் பாட்டு அளவு என்பனவற்றாற் பெயர்பெறும். அவை முறையே புறநானூறு களவழி நாற்பது கார்நாற்பது ஐந்திணையைம்பது கலித்தொகை குறுந்தொகை என்றாற்போல்வனவாம். தொடர்நிலைச்செய் யுள் சொல் பொருள் என்னும் இருவகையிலும் தொடர்ந்து வரும். அந்தாதியாகப் பாடப்பெற்ற சிற்றிலக்கியங்கள் சொற்றொடர் நிலைச் செய்யுள் எனப்படும். சிலப்பதிகாரம் சிந்தாமணி முதலியன பொருட்டொடர்நிலைச் செய்யுட்கள் ஆகும். பொருட்டொடர் நிலைச் செய்யுள் எனினும், காவியம் (காப்பியம்) எனினும் ஒக்கும். சொல்லணிகளால் அமையும் கோமூத்திரி கூடசதுக்கம் மாலைமாற்று எழுத்து வருத்தனம் நாகபந்தம் வினவுத்தரம் காதைகரப்பு கரந் துறைச் செய்யுள் சக்கரம் சுழிகுளம் சருப்பதோபத்திரம் அக்கரச்சுதகம் போல்வன சித்திரகவிகள் என வழங்கும்.

முருகன் திருவருளால் பழுத்த தமிழ்ப் புலமை பாலிக் கப்பெற்ற குமாரகுருபர அடிகள், முத்தகம் காவியம் சித்திரப் பாட்டு என்னும் அணியியல் நூற் குறியீடுகளைப் பின்வரும் மதுரைக் கலம்பகச் செய்யுளிற் பயன்படுத்தி யிருத்தல் காணலாம் :

" குண்டுநீர்ப் பட்டத்து ஒண்டுறைச் சங்கமும்
வண்டமிழ்க் கடலின் தண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று காவியங் கற்றுச்

சித்திரப் பாட்டியல் தேர்ந்தன செல்லும்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்..."

மதுரைமா நகரில் இருவகைச் சங்கங்கள் உள்ளன. ஒரு வகை நீர் நிலைகளின் துறைகளில் இருப்பன. மற்றொரு வகை தமிழாகிய கடலிலுள்ள அகத்துறை புறத்துறைகளைத் தேர்வன. நீர் நிலைகளில் உள்ள சங்குகள் முத்தை அகத்தே பயின்று, காவில் இயங்குதல் அற்று, வரல் எழுத்து எனும் கோடுகளால் சித்திரப்பாட்டியல் தேர்ந்து கொண்டு, ஊர்ந்து செல்கின்றன. தமிழ்ச் சங்கங்கள் முத்தகம் என்னும் செய்யுளைப் பயின்று, காவிய நூல்களைக் கற்று, சித்திரப் பாட்டியல்களை ஆராய்ந்துகொண்டு நடைபெறுகின்றன என்பது இதன் பொருள்.

"சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர்
நூல்பாய் இடத்தும்உள, நோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைத்தோய் மதுப்பங்கயம் பாய எங்குஞ்
சேல்பாய் தடத்தும் உள,செய்யுள் மிக்கேறு சங்கம்"

எனவரும் அரிய பெரியபுராணத் திருப்பாடலும் ஈண்டு நம்மனோர் நினைவுகூர்ந்து மகிழற்பாலது.

## எதிர் நிரல்நிறை

எண்வகைப் பொருள்கோள்களுள் நிரல்நிறை என்பதும் ஒன்று. அதனை ஓர் அணியாகவும் அணிநூல்கள் கூறும். 'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும், பயனும் அது' எனவரும் திருக்குறள் நிரல்நிறைப் பொருள் கோளுக்கு நேரிய உதாரணமாகும். அன்பு அறன் என்னும் இரண்டினையும், பண்பு பயன் என்னும் இரண்டினையும் நிரலே நிறுத்தி, அன்பைப் பண்பாகவும் அறனைப் பயனாகவும் முறையே கொள்ள வைத்தலின், இது நிரனிறை எனப்படும். இவ்வாறன்றி இம்முறை மாறி எதிராக வருவதே எதிர் நிரல்நிறை எனப் பெயர் பெறும். நிரல் வரிசை எனவும், நிறை நிறுத்துதல் எனவும் பொருள் பயக்கும்.

"களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனும் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே"

எனவரும் செய்யுளில், களிறு கந்து என்னும் இரண்டும், கூம்பு கலன் என்னும் இரண்டும் முறையே கூறப்பட்டுள்ளன. இவற்றை முற்கூறிய நிரல் நிறைபோல அன்றி, அதற்கு எதிர்மாறாகக் 'களிறு போலக் கலனும் கந்து போலக் கூம்பும் தோன்றுகின்ற துறை' எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அது பற்றியே இஃது எதிர் நிரல் நிறை எனப் பெயர் பெற்றது. இவ் விலக்கணக் குறியீட்டினைப் பின்வரும் செய்யுள் வரிகளில் குமரகுருபர அடிகளார் குறிப்பிட்டுப் பாடுகின்றார் :

"ஆரூர் அமர்ந்த ஞானசம் பந்த !
நிற்புகழ்ந் திறைஞ்சும் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பற் றிருப்பர் என்ப
பொருட்டுணி புணர்ந்த புலமை யோரே !
இகபரம் இரண்டினும் எதிர் நிறை கொளினும்
தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்
முன்னவர் மொழிந்ததற்கு அன்னியம் ஆகலின்,
விருப்பு வெறுப்புள வாய
கருத்தினர் ஆகவும் கண்டனம் யாமே"

திருவாரூரில் அமர்ந்துள்ள ஞானசம்பந்த தேசிக ! நும்மைப் புகழ்ந்து இறைஞ்சி வழிபடும் அடியார்கள் விருப்பும் வெறுப்பும் அற்று, வேண்டுதல் வேண்டாமை இல்லாமல் இருப்பார்கள் என அறிவுடைப் பெருமக்கள் கூறுவர். விருப்பு வெறுப்பற்றிருப்பர் என்னும் தொடரை, இகபரம் என்னும் இரண்டனோடும் இயைத்து, எதிர் நிரல் நிறையாகப் பொருள் கொண்டாலும், அல்லது வேற்றுமைத் தொகையாகப் பொருள் கொண்டாலும், அவர்தம் கூற்றுப் பொருந்துவதாகக் காணப்படவில்லை. 'இகம்பரம்' 'விருப்பு வெறுப்பு அற்றிருப்பர்' என்னும் தொடர்களை இயைத்து எதிர்நிரல் நிறையாகப் பொருள் கொள்ளின், 'இகத்தில் வெறுப்பற்றிருப்பர்' 'பரத்தில் விருப்பற்றிருப்பர்' என்பது பொருளாகும். இவ்வாறன்றி இலக்கண நூல்கள்

கூறும் பலவகைத்தொகைகளுள் வேற்றுமைத்தொகையாக வைத்துப் பொருள்கொண்டால், 'விருப்பினிடத்து வெறுப்பு அற்றிருப்பர்' எனப் பொருள்படும். எவ்வகையிற் பொருள் கொள்ளினும், நும்மை வணங்கும் அடியவர்கள் விருப்பும் வெறுப்பும் அற்றிருப்பர் என்று கூறுதல் பொருந்தாது.

நும்மை வழிபடும் அடியார்கள் நும்பாற் கொண்ட பேரன்பினாலும், நுமக்குத் தொண்டு செய்து கொண்டேயிருக்கவேண்டும் என்னும் பேரார்வத்தினாலும், 'வீடும் வேண்டா விறலினர்' என்றதற் கேற்பப் 'பரம்' ஆகிய வீடு பேற்றில் வெறுப்பும், 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்றதற் கேற்ப 'இகம்' ஆகிய இவ்வுலக வாழ்வில் விருப்பமும் கொண்டிருக்கின்றனர். இதனை நான் தெளிவுறக் கண்டுணர்ந்திருக்கின்றேன் என்பது இச் செய்யுளின் பொருள்

இவ்வாற்றாற் குமரகுருபரர்தம் குருபத்திச் சிறப்பும், இலக்கணப் புலமையும், கற்பனைத் திறனும், இணையற்ற இனிய சொல் வன்மையும், பிறவும் புலனாதலை நம்மனோர் உணர்ந்து கொள்ளலாம்.

## 'மிக்கோன் ஆயினும் கடிவரை யின்று'

பொருளிலக்கணம் என்பது தமிழ்மொழிக்கே யமைந்த சிறப்புரிமை என்பதனை முன்னர் அறிந்தோம். பொருளிலக்கணத்தை யொட்டியும், சான்றோர்கள் தத்துவத் துறையிற் கற்பனைத் திறன்மிக்க கவிதைகளை இயற்றியுள்ளனர். தலைவனும் தலைவியும் ஊழ்வயத்தால் தம்முள் ஒருவரையொருவர் தலைப்பட்டுக் கூடுவர் என்றும்; அங்ஙனம் கூடும் தலைமக்கள், பிறப்பு குடிமை ஆண்டு உருவுநிறுத்த காமவாயில் நிறை அருள் உணர்வு திரு முதலிய பண்புகளால் தமக்குள் ஒத்த தன்மையராகத் திகழ்வர் என்றும்; ஒரோவழித் தலைவன் தலைவியைவிட இப் பண்புகளில் உயர்ந்தவனாக விளங்குவனாயின், அது நலம் பயப்பதேயாம் என்றும் தொல்காப்பியம் கூறும். இதனை,

" ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பாலது ஆணையின்

ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே "

எனவரும் தொல்காப்பிய நூற்பாவால் உணரலாம். தலைவன் 'மிக்கோனயினும் கடிவரை யின்று' என்றமையால் தலைவி தலைவனிற் சிறிது இழிந்தவளாயினும், அஃது இழுக்கன்று என்பது பெறப்படும். இங்ஙனம் அருளிச்செய்தமை ஆசிரியர் தொல்காப்பியரின் விழுமிய உலகியலறிவை விளக்குவதாகும். இஃதெங்ஙன மாயினும், அருட்டிரு. குமரகுருபர அடிகளார் இத் தொல்காப்பிய நூற்பாவினைக் கருத்திற்கொண்டு, தமது நூலொன்றிற் பின்வருமாறு கருத்தமைத்துப் பாடுகின்றார்.

தருமையும் கமலையும் மதுரையும் திருநகராக வீற்றிருந்து அருளரசு நடாத்தும் மாசிலாமணி தேசிக! சப்பந்தர் என்னும் ஒரு பெயரையும் தாங்கள் கொண்டிருத்தலின், எளியேங்களோடு தாங்கள் சம்பந்தம் (திருமண வுறவு) செய்துகொண்டு ஏற்றருளல் வேண்டும். தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே இன்றியமையாதன என அகப்பொருள் இலக்கண நூல்கள் கூறும் அரிய பல பண்பொப்புமைகள் நமக்குள் அமைந்திருக்கின்றன. நீ என்று உள்ளனையோ அன்றே நாங்களும் உள்ளோம். நின்னைப் போலவே அழியாத்தன்மை எமக்கும் உண்டு. நீ வியாபகத் தன்மை பெற்றிருப்பது போலவே நாங்களும் ஓரளவு பெற்றுள்ளோம். நீ சித்துப் பொருளாகத் திகழ்தல் போலவே நாங்களும் சித்துப்பொருள்கள் எனத் திகழ்கின்றோம். இச்சை ஞானம் கிரியை என்னும் மூவகை யாற்றல்களும் நின்பால் அமைந்து கிடத்தல்போலவே எம்மிடமும் அமைந்து காணப்படுகின்றன. இந்நிலையில் யாங்கள் உமக்கு அந்நியமின்றி, அநந்நியமாகவே இருக்கின்றோம். உயிர்களாகிய நீவிர் 'புருடன்' எனவும் வழங்கப்பெறுதலின், புருடத்துவம் உடைய நும்மை யாம் தலைவி நிலையிற் கொள்ளுதல் இயலாது எனக் கூறுவீராயின், புருடோத்தமன் எனப் பெயர்பெற்ற திருமாலை ஒரு சத்தியாகத் தாங்கள் கொண்டிருத்தலின், அங்ஙனம் கூறுதல் அமையாது. முன்னே கூறிய ஒப்புமைத் தன்மைகளில் உயிர்களாகிய நீவிர் எமக்குச்சரிநிகர்சமானம் ஆகமாட்டீர் எனின், 'மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே' எனத் தொல்

காப்பியம் விதித்திருத்தலால், சமமாகாத வழியும் எம்மை ஏற்றுக்கொள்ளுதல்பற்றித் தங்கட்கு நேரும் இழுக்கு ஒன்றும் இல்லை. எனவே எம்மைக் கைப்பிடித்தருளிச் சம்பந்தம்கொண்டு, எமக்கு ஆரா இன்பம் அளித்தருளல் வேண்டும்.

" மாசி லாமணித் தேசிக ராய
சம்பந் தப்பெயர் தரித்தமை யால்எமைச்
சம்பந் தஞ்செயத் தகும்தகும் நினக்கே...
முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக
உயர்ந்தோன் தலைவன் ஒத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினும் இழிபெனப் படாதே...
காதலின் எமையருட் கைப்பிடித் தருளி
ஒருவரும் உணராப் பரம வீட்டில்,
இருள்அறை திறந்த பெருவளி மண்டபத்து
உயர்நா தாந்தத் திருமலர் அமளியில்,
புளகம்மெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவா ரமுத பானம தார்ந்து,
கருவிகள் கழன்று பரவசம் ஆகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து
பேரா இயற்கை பெற்றினி திருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே "

இங்ஙனம் தத்துவத் துறைப் பொருள் குறித்துப் பாடுங்காலும், இலக்கணநூல் விதி தழுவிப் பாடியிருத்தல் குமரகுருபர அடிகளின் சிறந்த புலமையினைப் புலப்படுத்துவதாகும்.

## புலநெறி வழக்கம்

பொருளிலக்கணத்திற் கற்பியற் பகுதியில் உலகியலையொட்டித் தலைவன் தலைவியைப் புறக்கணித்துச் சேரிப் பரத்தையர் காமக்கிழத்தியர் முதலியவர்களோடு தொடர்பு கொண்டு ஒழுகுவதாக, 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலநெறி வழக்கம்' பற்றிக் கூறப்

படுவதுண்டு. அப் பொருளிலக்கணச் செய்தியைத் தத்துவத் துறையில் அமைத்து, நம் தமாதநுபா அடிகளார் சைவ சித்தாந்த உண்மைகளை உலகியலில் வைத்தும் உருவக அணி புணர்த்தும் சொற்பொருட் சுவை நலங்கள் துளும்ப, நம்ம னோர்க்கு நன்கினிது உணர்த்தி யருள்கின்றார்.

உயிர் ஞானத்தைப் புணர்ந்து வீடு பெறுதற்கு உரியது. ஆனால், அது பண்டே ஆணவமலந் தொடர்பு கொண்டு ஞானத்தைப் புணராது புறக்கணித்து, அஞ்ஞான வயப் பட்டு மயங்கிக் கிடக்கின்றது. ஆணவமலச் சேர்க்கையால் உயிர்க்கு மாயையின் தொடர்பு நிகழ்கின்றது. அது சுத்த மாயை அசுத்தமாயை என்று இருதிறப்படும். சுத்தமாயை யினின்று சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் சிவதத்துவங்கள் ஐந்தும் தோன்றும். அசுத்த மாயையினின்று காலம் நியதி கலை என்பன தோன்றும். கலையானது வித்தை அராகம் மூலப்பிரகிருதி என்பன வற்றைத் தோற்றுவிக்கும். மூலப்பகுதியினின்று ஞானேந் திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆக, இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்கள் தோன்றும். இவற்றோடெல் லாம் இயைந்து நின்று உயிரானது தனுகரண புவன போகங்களைப் பெற்று உலகியலில் மயங்கியுழன்று வரும். இதனை,

"ஈதொன்று இயம்புவல் கேண்மதி பெரும!
அலையா மரபின் ஆணவக் கொடிஎனும்
பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ,
ஏகலன் தணந்தாங்கு என்னையும் உணராது
மோகமோடு அழுந்தி முயங்குறும் அமையத்து
அங்கவட் குரிய தங்கையர் இருவருள்,
குடிலை என்னும் மடவரல் ஒருத்தி
எய்தரும் புதல்வியர் ஐவரைப் பெற்றனள்!
மோகினி என்பவள் மூவரைப் பயந்தனள்!
ஆகிய புதல்வியர் அங்கவர் மூவருள்
கலைஎனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானும் மூவரைத் தந்தனள்! அவருள்

மான்எனப் பட்ட மடவரல் ஒருத்தி
எண்மூன்று திறத்தரை ஈன்றனள்! இத்திறம்
நண்ணிய மடந்தையர் ஐயெழு வரையும்
கிளப்பருங் காமக் கிழத்தியர் ஆக
அளப்பில் காலம் அணைந்தனன்...''

எனக் குமரகுருபரர் உருவகமாகக் கூறியிருக்குந் திறம், பேருவகை விளைவிப்ப தாகும். இவ் வுருவகத்தின்கண், உயிரானது ஞானத்தைப் புணர்ந்து வீடுபேறு எய்தக்கடவ தாகலின், உயிர் தலைவன் ஆகவும், ஞானம் தலைவியாகவும் கொள்ளப்பெற்றன. உயிர் ஞானத்தைப் புணராதவாறு தடை செய்தலானும், 'பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக் குண்டு என்றும் கணவற்கும் தோன்றாத கற்பு' எனத் திருவருட்பயன் கூறுதற்கேற்ப உயிர்கள் பலவற்றையும் தானொன்றேயாய்ப் புணர்ந்து நிற்றலானும், ஆணவமலம் "சேரிப் பரத்தை"யாக இழித்துரைக்கப் பட்டது. ஆணவ மலம் காரணமாக மோகம் மதம் அராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என்பன நிகழ்தலின், "மோகமோடு அழுந்தி" என்றும்; ஆணவமலத்தின் சேர்க்கையால் உயிர்க்குச் சுத்தமாயை அசுத்தமாயைகளின் தொடர்பு வாய்த்தலின் அவற்றை அதற்குத் "தங்கையர் இருவர்" என்றும்; உயிர்க்குப் போக நுகர்ச்சியின் பொருட்டு மல சத்தியைச் சிறிது நீக்கிச் செயலாற்றலை விளைத்துப் போக நுகர்ச்சியில் அழுத்துவது கலை எனும் தத்துவமாதலின் அதனைக் "கணிகை" என்றும்; சிவதத்துவம் 5 வித்தியா தத்துவம் 6 ஆன்மதத்துவம் 24 ஆகிய முப்பத்தைந்த னோடும், உயிரானது இயைந்து நின்று போகம் நுகர்ந்து வருதலின் அவற்றைக் "காமக்கிழத்தியர்" என்றும் பிறவாறும் அடிகளார், விரிவாக உருவகம் செய்திருக்கும் அருமைப் பாடு அறிஞர் அனைவரும் பெரிதும் போற்றுதற் குரியது! இராமலிங்க அடிகளார் இயற்றியுள்ள 'குடும்ப கோஷம்' என் னும் கவிதையும் ஈண்டு இதனோடு ஒப்பிட் டுணரற்பாலது.

---

# திருவாசகம் - கொக்கிறகு

(மு. அருணாசலம்)

சிவபெருமானுக்கு விருப்பமான பூ வகைகள் பல; தும்பை, கொன்றை, ஆத்தி என. இவற்றுள், கோக்கிறகு மிகவும் சிறப்பான தொன்று. கொக்கிறகு நிலப் பூ வகை என்று புஷ்பவிதி கூறும்.

கொக்கிறகு என்ற பெயர் காவிரி நாட்டில் இந்த வடிவத்திலேயே இன்றும் வழக்கத்திலுள்ளது. மிகவும் தூய்மையான வெண்ணிறம் உடையதாதல் பற்றி இப்பெயர் வந்தது. தூய வெண்ணிற உடையைப் பார்த்தாலும், இலையில் படைத்த சோற்றின் தூய வெண்ணிறத்தைப் பார்த்தாலும், 'தும்பைப் பூப்போல இருக்கிறது', 'கொக்கிறகு போல' என்று உவமித்துச் சொல்வது இன்றும் பெரு வழக்காயுள்ளது.

கொக்கிறகு என்பது, மந்தாரை இனத்தைச் சேர்ந்த செடி. மந்தாரையில் பலவகை: சிவப்பு, பன்னீர், நீலம், மஞ்சள் முதலாக, இவை யாவும் மரங்கள். சில பெருமரங்கள், சில சிறு மரங்கள். இவ் வகையுள், வெள்ளை நிற மந்தாரை மட்டும் மரமாயிராமல் சிறு குத்துச் செடியாயிருக்கும். பெரிய இலைகளும், பெரிய பூவுமுடையது. ஆண்டு முழுமையும் பூக்கும். பூ இதழ்கள் உதிர்ந்து காயாகும். விதையிலிருந்து உற்பத்தியாவது.

இதன் வெண்மை சிறப்பு என்பது வெளிப்படை. அது பற்றியே இது கொக்கு மந்தாரை, கொக்கிறகு மந்தாரை, வெள்ளை மந்தாரை எனவும் குறிப்பிடப் பெறும். புஷ்பவிதியும் புட்ப பலனும் இதை வெள்ளை மந்தாரை, மந்தாரை வெண்பூ என வழங்கும்.

மந்தாரை வெண்பூ ஈசன்
மலரடி மருவச் சாத்தில்
சந்தானம் ஈரெட் டாகச்
சார்ந்து நற்போகம் எய்திக்
கோந்தாரும் தாரார் கூந்தற்
கோதையர் விரும்ப வாழ்ந்தே
இந்தாரும் சடையினான் தன்
இணையடி எய்து வாரே.

என்பது புட்ப பலன். கொக்கிறகு என்ற பெயர், பேச்சு வழக்கில் கொக்கரை என மருவி வழங்குவதும் உண்டு.

திருவாசகத்துள் மாணிக்க வாசகர் சிவபெருமானுக்கு உவப்பான பல மலர்களைக் கூறுகின்றார்.

தாளி அறுகின் தாராய் போற்றி
கழநீர் மாலைக் கடவுள் போற்றி
மந்தார மாலையே பாடுதும்காண் அம்மானாய்
வட்ட மலர்க் கோன்றை மாலை பாடி
மத்தமும் பாடி.
கோன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர்
கழநீர் மாலை
ஏலுடைத்தாக எழில்பெற அணிந்தும்

இவ்வாறு அவர் குறிப்பிடும் மலர்களில் கொக்கிறகும் ஒன்று.

குலம்பாடிக் கொக்கிறகும் பாடிக் கோல் வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாள் தோறும்
அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.

என்பது திருத் தெள்ளேணம் 20-ம் பாடல். "சிவபெருமானுடைய அடியார் கூட்டத்தையும் அவன் தலையில் அணிந்த கொக்கிறகு மலரையும் வளையணிந்த உமா தேவியாரின் கருணை நலத்தையும் பெருமான் நஞ்சுண்ட திறத்தையும் புகழ்ந்து பாடி"—என்பது முதல் இரு வரிகளின் பொருள்.

கொக்கிறகு ஒரு மலர் என்பது அறியாத காரணத்தாலோ வேறு யாது காரணத்தாலோ, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தம்முடைய உரையில், "கொக்கிறகினையும் புகழ்ந்து பாடி" என்று மட்டும் எழுதி, பின்வருமாறு விளக்கமும் எழுதினர் :

"கொக்குருவங்கொண்ட அசுரன் ஒருவனைக் கொன்று அவன் இறகைப் பிடுங்கிச் சிவபெருமான் தரித்துக்கொண்ட கதை உபதேச காண்டத்திற் கூறப்பட்டது.................. கொக்கிறகு என்பதற்கு வேட்டுவ வடிவம் கொண்டகாலை இறைவன் சூடிய கொக்கின் இறகு என்று பொருள் கொள்ளுதலுமுண்டு."

இதையே பின்பற்றித் தருமபுரம் பதிப்பில் "கொக்கு இறகு - கொக்கு வடிவமான அசுரனைக் கொன்று இறைவன் சூடிய இறகு" என்று பொருள் எழுதப்பட்டுள்ளது.

இத் தவறுகளை எடுத்துக் காட்டித் தருமபுரம் பதிப்பாளர் ஒருவரிடம் நான் பேச நேர்ந்தது. கேட்ட அவர் இதே பிழையைத் திருமுறை உரையில் தாமும் செய்திருந்த காரணத்தால், கொக்கின் இறகு என்று பொருள் கொள்ளுவதற்கு ஆதாரங்கள் தேடித் தொகுத்து எழுதியும்விட்டார்!

திருவாசகம் உலகில் நின்று நிலவுவது இறைவன் அருளால்; பாமர மக்களுடைய உள்ளத்தை உருக்கிச் சிவன்பால் செலுத்தி யிருக்கிறது திருவாசகம். பாமர மக்கள் அதைப் பூசையில் வைத்துப் பூசித்து வருகிறார்கள். இந்த அகக்கோயில் புறக்கோயில் என்ற இருவகைக் கோயில்களால்தான் திருவாசகம் சிறிதும் இறந்துபடாமல் நிலவி வருகிறது; பண்டிதர்களால் அல்ல.

எளிதாகப் பொருள் விளங்குமாறு இருப்பது இதன் சிறப்பு. இதில் கூறப்பட்டுள்ள கிளைக் கதைகளும் அங்ஙனமே எல்லோரும் அறிந்தவை. பரமன், பால் வெண் மதி சூடியவன், வாடல் தலைமாலை சூடியவன், புலித்தோல் வலித்து வீக்கியவன், ஆடல் அரவசைத்தவன், காலன் உடல் கிழியக் காய்ந்தவன் என்பன போன்ற பராக்கிரமச் செயல்களை அறியாதார் நாட்டில் இலர். இத்தகைய பராக்கிரமங்களைத் தொகுத்து உரைப்பது திருச்சாழல். அங்கு வந்துள்ள செய்திகள் நீறு பூசுதல், அரவம் அணிதல், கோவண ஆடை உடுத்தல், புலித்தோல் உடுத்தல், தக்கன் யாகத்தில் அயன், அரங்கன், அந்தகன், சந்திரன், தக்கன், எச்சன் வலியடக்கியமை, பிரமனும் மாலும் அறியாமை, மலைமகளைப் பாகத்திலும் கங்கையைச் சடையிலும் வைத்தல், ஆலாலம் உண்ணல், கபாலமேந்துதல், இடபம் ஏறுதல், அறமுரைத்தல், பிச்சை ஏற்றல், சலந்தரனை அழித்தல் போன்றவை. பிற இடங்களில்வந்துள்ள செய்திகளும் பல. திருவுந்தியார் முழுமையும் முப்புர தகனமும் தக்கன் வேள்வி தகர்த்தலும் கூறும். ஆனால் ஓரிடத்திலும், சிவபிரான் கொக்குருவம் கொண்ட அசுரனைக் கொன்றான், கொன்று அவன் இறகை அணிந்தான் என்று வழங்கியதில்லை. கந்தபுராணத்திலோ, உபதேச காண்டத்திலோ,

எங்கோ ஒரு மூலையில் காணும் குறிப்பு, சைவ மக்களோ, அடியார்களோ அறிந்த ஒரு வரலாறு அன்று. இக் குறிப்புக்கு வழக்காறு இல்லை. வழக்காறு இல்லாத கதை திருவாசகத்துள் எங்கும் குறிப்பிடப்பெறவில்லை. அப்படி இல்லாத குறிப்பு அங்கு உண்டென்றால், அக் குறிப்பை நாம் ஏற்பதும் அருமை.

சிவபிரான் திருவுருவங்களில் மற்றச் சின்னங்களைக் காணலாம். கொக்கின் இறகு காணமுடியாது. ஆதலால் கொக்கிறகு என்பது இங்கு கொக்கு உருவங்கொண்ட அசுரனது இறகு அன்று. கொக்கிறகு மலர் என்பது யாரும் உணரத் தக்கது. கொக்கிறகு மலர் நந்தவனங்களெங்கும் இன்றும் காணப்படுகின்றது.

மேற்குறித்தவற்றோடு, பின்வரும் திருமுறைக் குறிப்புக்களும், அறிந்து இன்புறத் தக்கன. கொக்கிறகைக் கூறும்போது, வேறு மலர்களுடன் சேர்த்து அதைக் கூறியிருப்பதைப் பல இடங்களிலும் காணலாம்.

கொக்கின் னிறகின் னொடு வன்னி
புக்க சடையார்க் கிடமாகும். (1-36-1)

கொக்கிற கோடு கூவிள மத்தம்
கொன்றையொ டெருக்கணி சடையார். (1-41-2)

கொக்கிற குங்குளிர் சென்னி மத்தம்
குலாய மலர் சூடி. (3-107-6)

கொக்கின் தூவலும் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்தலை மாலை விரிசடை
நக்கன். (5-55-4)

சீர்கொள் கொக்கிறகும் கொன்றையும் துன்று
சென்னிச் சிற்றம்பலக் கூத்தா. (9-2-10)

இக்குறிப்புக்களில் கொக்கிறகுடன் கூட வன்னி, கூவிளம், மத்தம், கொன்றை, எருக்கு ஆகிய மலர்களை அணியப் பெற்ற சடையன் அல்லது சென்னியன் என்று கூறக் காணலாம்.

கொக்கிறகர் குளிர்மதிச் சென்னியர். (5-80-5)

கொக்கிறகு சென்னி உடையான் கண்டாய். (6-39-2)

*கொக்கிறகும் மதிக்கொழுந்தும் குளிர்புனலும் ஒளிர்கின்ற
செக்கர் திகழ் சடைமுடியார்.* (12-30-25)

இப் பகுதிகளில் சென்னியிலணிந்த கொக்கிறகும் மதிக்கொழுந்தும் போல்வன கூறப்பெற்றுள்ளன.

இதுகாறும் கூறியவை, கொக்கிறகு என்ற சொல்லாட்சி மலரையே குறிப்பது என்று காட்டும். ஆனால் ஓரிடத்தில் அப்பர் சுவாமிகள் - நான்காம் திருமுறையில் "சுண்ணவெண் சந்தனச் சாந்து" என்ற பதிகம் இரண்டாம் பாடலில், "புள்ளின் சிறகுப்......உடையார் ஒருவர் தமர் நாம்" என்று கூறுகின்றார்.

இங்கு "புள்ளின் இறகு" என்பதைக் கொக்குவடிவில் வந்த அசுரன் இறகு என்று கொள்ளத் தடையில்லை. இதை அடுத்த இதழில் விளக்குவோம்.

---

# கார்த்திகை விளக்கீடு*

[ந. ரா. முருகவேள்]

ஒரு நாட்டின் நாகரிகம் பண்பாடு என்பனவற்றையுணர்தற்கு, அந்நாட்டு மக்களாற் கொண்டாடப் பெறும் விழாக்கள் பெரிதும் துணைசெய்வன ஆகும். நாட்டு மக்களின் இன்ப வாழ்வையும், செல்வச் செழிப்பையும், இனிய பழக்க வழக்கங்களையும் நன்கினிது உணர்த்துவன விழாக்களே எனலாம். விழாக்கள் மக்களிடையில் அன்பையும் ஒற்றுமையையும் வளர்க்கின்றன, துன்பமும் கவலையும் போக்கி, இன்பமும் உவகையும் அளிக்கின்றன. விழா சாறு சிறப்பு என்பன ஒருபொருட் சொற்கள். மக்கள் ஒன்றுகூடி விழைவுடன் கொண்டாடுவது விழா; வாழ்க்கையில் இன்பங் கனிந்த சாறு எனலாம்படி அமைவன சாறு; வாழ்க்கைக்குச் சுவையூட்டி இனிமை பெருக்கிச் சிறப்பையளிக்கும் நிகழ்ச்சிகள் சிறப்பு எனப்படும்.

*செஞ்சொல் மாமணி திரு. ச. சிவகுமாரன், எம். ஏ. அவர்கள் தலைமையில், கார்த்திகைத் திருநாளில் (22-11-61) சென்னைத் தருமை யாதீன சமயப் பிரசார நிலையத்தில், நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

இறையனர் களவியல் உரையில் ஆசிரியர் நக்கீரர், பண்டைநாளில் தமிழ் நாட்டில் நடைபெற்று வந்த பெரு விழாக்கள் என மதுரை ஆவணி அவிட்டம், உறையூர்ப் பங்குனி யுத்திரம், கருவூர் உள்ளி விழா என்பனவற்றைக் குறிப்பிட் டுள்ளார்.

"கழுமலர் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே"

எனவரும் நற்றிணைப் பாடல் (234), இச் செய்தியினை வலி யுறுத்தும். சிலப்பதிகாரம், மணிமேகலைக் காப்பியங்களால் புகார் நகரில் நிகழ்ந்த இந்திர விழாவைப் பற்றியும் நாம் அறியப் பெறுகின்றோம். இங்ஙனம் பழந்தமிழ் இலக்கியங் களால் உணரப்படும் விழாக்கள் பலவற்றுள், கார்த்திகை விளக்கீடும் ஒன்றாகும்.

தமிழகத்தின் சமய மறுமலர்ச்சி இயக்க வரலாற்றிற் சிறப்பிடம் பெற்றுத் திகழும் திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் என்னும் இருபெருஞ் சான்றோர்களும், தமிழ் மக்கள் பலவகைத் திருவிழாக்களைக் கொண்டாடி மகிழ் தற்குப் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்தனர் என லாம். திருநாவுக்கரசர் திருவாரூரில் நிகழ்ந்த திருவாதிரை விழாவினைப் பெரிதும் வியந்து போற்றி "முத்துவிதானம் மணிப்பொற்கவரி" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடிச் சிறப்பித்துள்ளார். திருஞான சம்பந்தப் பெருமான், நமது சென்னைத் திருமயிலைத் திருப்பதிகத்தில், திங்கள் தோறும் முறையே நடைபெறும் திருவிழாக்களைக் கிளந் தெடுத்துக் கூறியருள்கின்றார். அதன்கண்,

"வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்"

எனவரும் திருப்பாடல், கார்த்திகை விழாவைப் பற்றிக் குறிப்பிட்டு, அதனைத் தொல் கார்த்திகை நாள் என்றும் விதந்து போற்றுகின்றது. இற்றைக்கு ஏறத்தாழ 1300 ஆண்டுகட்கு முற்பட்ட திருஞான சம்பந்தர் தாமே, இதனைத் தொல் கார்த்திகைநாள் எனக் குறிப்பிடுவாராயின்,

கார்த்திகை விழாவின் தொன்மையும் பெருமையும் இனைய வென்று எண்ணியுணரலாம்.

கார்த்திகை விழாவில் பெண்கள் வீடுதோறும் வரிசை வரிசையாக மிகப்பல விளக்குகளை ஏற்றிவைத்து மகிழ்வர். எனவே, இதனைப் பெண்களுக்கே சிறப்பாக உரிய விழா எனக் கூறலாம். 'மனைக்கு விளக்கம்' எனத் திகழும் மடவார்கள், இங்ஙனம் விளக்கேற்றி வைத்து விழா அயர்தல் மிகவும் பொருத்தமே யாம். கார்த்திகை விழா பெண்களுக்குரியதாதலையும், அவ்விழாவிற் பெண்கள் வரிசை வரிசையாக விளக்கேற்றி வைத்து வழிபட்டு மகிழ் தலையும், "தையலார் கொண்டாடும் விளக்கீடு" என்னும் தேவாரத் தொடர் புலப்படுத்துகின்றது. பெண்களுக்குரிய இவ்விழாவின் சிறப்பினைப் பெண்ணினல்லாராகிய அவ் வைப் பிராட்டியார்,

"வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அங்காட்டு
இலையில மலர்ந்த முகையில் இலவம்
கலிகொள் ஆயம் மலிபுதொகுபு எடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்தலை ஆகிய பயந்தபு கானம்" —அகநானூறு, 11

எனவரும் பாடற் பகுதியில், உவமையாகக் கூறி மகிழ் கின்றார். 'வெப்பம் மிக்க பாலைநிலக் காட்டின்கண் சிவந்த இலவம் பூக்கள் மலர்ந்திருத்தல், மகளிர் பலரும் மகிழ்ந்து கூடி ஒளிமிக ஏற்றி வைத்த விளக்குகளின் நீண்ட பல வரிசைகளைப் போல உள்ளது' என்பது கருத்து. பாலை நிலத்தைப் பற்றிப் பாடுங்காலும், அவ்வைப் பிராட்டியார் தம்மைப் போன்ற பெண்பாலார்க்குரிய கார்த்திகை விழா வினை இயைபு படுத்திக் "கலிகொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த அஞ்சுடர் நெடுங்கொடி பொற்ப" என உவமை கூறி யுணர்த்திய திறம், உவகை யூட்டுவதாகும்.

இங்ஙனமே, தெய்வமணம் கமழும் இவ்விழாவின் சிறப் பினைத் தெய்வ வுணர்விற் சிறந்து திருமுருகாற்றுப்படை பாடியருளிய ஆசிரியர் நக்கீரர், தமது பாடல் ஒன்றிற் குறிப்பிட்டுள்ளார். 'அந்திமாலைச் செக்கர் வானத்தில் வெண்ணிறக் கொக்கினங்கள் வரிசையாகப் பறந்து செல்

லும் காட்சி, முருகப் பெருமான் தமது சிவந்த மார்பில் அணிந்துள்ள முத்துமாலையைப் போல விளங்குகின்றது' எனும் கருத்து அமைய,

"நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்
பைங்காற் கொக்கினம் நிரைபறை யுகப்ப"—அகநானூறு,120

என அருளிச் செய்யும் இயல்பினராகிய ஆசிரியர் நக்கீரர், தம் தெய்வவுணர்வின் மாட்சிமை தோன்ற,

"மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம..." —அகநானூறு, 141

என்னும் வரிகளில், இவ்விளக்கீட்டு விழாவின் இயல்பினை இனிது பாடி இன்புறுத்துகின்றார். விளக்கீட்டு விழா கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாளில் பௌர்ணமியை ஒட்டி நிகழும் என்பதனை "மதிநிறைந்து அறுமீன் சேரும் அக லிருள் நடுநாள்" என்னும் தொடரால், ஆசிரியர் நக்கீரர் புலப்படுத்தியிருத்தல் அறிந்தின்புறற்பாலது.

இவ்வாறே பெருங்கடுங்கோ என்னும் சான்றோரும் கார்த்திகை விழாவின் சிறப்பினைத் தமது கவிதைகளிற் புகழ்ந்து போற்றுகின்றார். இவர் சேரமான் மரபினர். பாலைத்திணை பாடுதலில் வல்லவர். ஆதலிற் "சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ" எனவும் இவர் வழங்கப் பெறுவர். 'சிறந்த முள்முருக்கு கோங்கு அதிரல் பாதிரி மரவம் முதலிய பூக்கள் பலவும் மலர்ந்து மணங்கமழ்ந்து இலங்கும் காட்டின் இயல்பு, பரவுக்கடன் பூண்டோரால் பலநிற நறுமலர்கள் தூவி வழிபடப்பெறும் தெய்வத்தின் திருக்கோயிலைப் போலத் திகழ்கின்றது' என்னும் கருத்து அமைய,

"மாஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்
நன்றே கானம் நயவரும் அம்ம..." —அகநானூறு, 99

எனப் பாடியருளுதலால், இப்பெருந்தகையும் நக்கீரர் போலத் தெய்வவுணர்வின் மிக்க சிந்தையுடையவர் எனத் தெரிகின்றது. இவர் தமது பாடல்களில், இரண்டு இடங்களில், கார்த்திகை விழாவினைக் கவின்மிகச் சுட்டுகின்றார்:

" அருவி யான்ற உயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே " —அகம், 185

" கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே " —நற்றிணை, 202

தலைவன் கடந்து சென்ற மலையின்கண் சிவந்த இலவம் பூக்கள் மலர்ந்திருக்கும் காட்சியும், காடுகளிற் கோங்க மலர்கள் பூத்துத் திகழும் பொலிவும், பாலை பாடிய பெருங் கடுங்கோவுக்குக் கார்த்திகை விழாவின் விளக்குகளை நினைவூட்டுகின்றன. கார்த்திகை மாதத்தினை " அறுமீன்பயந்த அறஞ் செய் திங்கள் " என்றும், கார்த்திகை விழாவினைப் " பெருவிழா " என்றும் அவர் பாராட்டி யுரைக்கின்றார்.

நாடுமுழுவதும் கார்த்திகை விளக்கிட்டு விழா நிகழ்ந்தாலும், திருவண்ணாமலையில் ஏற்றப்படும் தீப விளக்கமே மிகப் பெரிதும் சிறப்புடையதாதலைக் குறிக்கும் நிலையில், "அருவியான்ற உயர்சிமை மருங்கிற் பெருவிழா விளக்கம்" எனப் பெருங் கடுங்கோ மொழிந்தருளியிருப்பது, மிகவும் பொருத்தம் அமைந்து காணப்படுகின்றது. இங்ஙனம் இவர் பாடியதற்கு ஏற்பத் திருவண்ணாமலையில் அருவிகள் நிறைந்திருந்தமை, " மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம் முழவதிரும் அண்ணாமலை " எனத் திருஞான சம்பந்தர் தேவாரம் கூறுமாற்றானும் உணரப்படும். இவ்வாறு நாடு முழுவதும் மகிழ்ந்து கொண்டாடும் பெருவிழாவாகப் பண்டை நாளிற் கார்த்திகை விழா விளங்கிய தென்பது,

" குடத்தர் விளக்கேபோற் கொம்பன்னார் காமம்
புறப்படா பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகும் மாலை அணிமலையில் தீயேபோல்
நாடறி கௌவை தரும் "

எனவரும் முத்தொள்ளாயிரச் செய்யுள் கொண்டும் உணரலாம். இதன்கண் 'அணிமலையில் தீ' எனத் திருவண்ணுமலைக் கார்த்திகைத் தீபச் சோதியே சுட்டப்பெற்றதென்பது, "நாடறி கெளவைதரும்" என்னும் தொடரின் துணை கொண்டு தெளியப்படும். இங்ஙனம் திருவண்ணுமலைக் கார்த்திகைத் தீபம் நாடறிந்த ஒருபெரு நிகழ்ச்சியாகத் திகழ்ந்து வந்தமைபற்றியே, "குன்றின்மேல் இட்ட விளக்கு" என்னும் தொடர், ஒரு பழமொழியாகவும் தமிழ் நாட்டில் வழங்கிவரத் தலைப்பட்டு விட்டது.

"கன்றி முதிர்ந்த கழியப்பன் ருள்செயினும்
என்றும் சிறியார்கண் என்ருனும் தோன்ருதாம்
ஒன்ருய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின் மேல் இட்ட விளக்கு"

என்பது, முன்றுறையரையனர் என்னும் சங்ககால முதுபெரும் புலவர் இயற்றிய பழிமொழிச் செய்யுள்.

கார்த்திகை விழாப்பற்றிய குறிப்புப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்ருன களவழி நாற்பது என்பதன் கண்ணும் வந்துள்ளது. கோச்செங்கணன் என்னும் சோழ வேந்தன், கணைக்கால் இரும்பொறை என்னும் சேர மன்னனெடு பொருது அவனைச் சிறையில் இட்டபொழுது, பொய்கையார் என்னும் புலவர், சோழனின் வெற்றித்திறத்தைப் புகழ்ந்துபாடிச் சேரமானைச் சிறைமீட்டனர் என்பர். இக் கோச்செங்கணனே பெரியபுராணம் கூறும் கோச்செங்கட் சோழ நாயனர் ஆவர். இவரை "இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட திருக்குலத்து வளச்சோழன்" எனத் திருமங்கையாழ்வார் புகழ்ந்து போற்றினர். இவ்வரசர் 'கழுமலம் என்னும் இடத்தில் கணைக்கால் இரும்பொறையோடு நிகழ்த்திய போரில், போர்க்களத்திற் பலவிடங்களிலும் செக்கச் செவேலென இரத்தத் துளிகள் சிந்திச் சிதறிக் கிடந்த காட்சி, கார்த்திகை விழாவில் ஏற்றிவைக்கப் படும் அளவில்லாத ஒளி விளக்குகளைப் போன்றிருந்தது' எனப் பொய்கையார் பாடுகின்ருர். சிவ பத்தியிற் சிறந்த கோச்செங்கட் சோழர்க்குத் திருக்கார்த்திகை விழாச்

செய்தி மிகவும் மகிழ்வளிக்கும் எனக் கருதியே, பொய்கை யார் இங்ஙனம் பாடினர் போலும் !

" ஆர்ப்பெழுந்த ஞாட்பினுள் ஆளாள் எதிர்த்தோடித்
தாக்கி எறிதா வீழ்தரும் ஒண்குருதி
கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்கைப் போன்றனவே
போர்க்கொடித் தானைப்பொருபுனல்நீர் நாடன்
ஆர்த்தமர் அட்ட களத்து."

இனி, இவைகளேயன்றிச் சீவகசிந்தாமணி என்னும் சிறந்த சமண சமயக் காப்பியத்தின்கண்ணும், திருவண்ணா மலைக் கார்த்திகைத் தீப விழாவைப் பற்றிய குறிப்பு வருகின்றது.

" தார்ப்பொலி தரும தத்தன் தக்கவா றுரைப்பக் குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்
போர்த்ததன் அகலமெல்லாம் பொன்னென வியர்த்துப் பொங்கி
நீர்க்கடல் மகரப்பேழ்வாய் மதனன்மற் றிதனைச்சொன்னான்"

மலைபோன்ற மார்பில் ஒருவன் செங்குவளை மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்திருந்தமை, திருவண்ணா மலையின்மீது கார்த்திகையின்போது ஏற்றி வைக்கப்படும் விளக்குகளைப் போன்றிருந்தது என்பது கருத்து. இதனால் பிற சமயத்தவர்களும் கார்த்திகை விளக்கீட்டு விழாவினைச் சிறப்புற மதித்துப் போற்றியமை புலனாகும்.

சிவபிரான் சோதியாய்ச் சுடராய்ச் சூழொளி விளக் காய்த் திகழ்பவன். ஒளிகளுக்கெல்லாம் மூல காரணன் சிவபெருமானேயாவன். "தேயமார் ஒளிகள் எல்லாம் சிவனுருத் தேசு" என்பது சிவஞான சித்தியார். இவ் வுண்மை யினை விளக்குவதே கார்த்திகை விளக்கீட்டு விழா ஆகும். கார்த்திகை அக்கினியை அதிதேவதையாக வுடையது என்பர். அதனால் அஃது எரி (பரி: 11) எனவும், அழல் (புறம்: 229) எனவும் வழங்கப்படும். ஒரு காலத்தில் கார்த் திகையை முதலாகக்கொண்டே நட்சத்திரங்கள் கணக் கிடப்பட்டு வந்தன என்றும், வராகமிகிரர் (கி. பி. 6 ஆம் நூற் றூண்டு) காலத்திற்குப் பின்னர்தான் அசுவினியை முதலா கக்கொண்டு கணக்கிடும் முறை வழக்கத்திற்கு வந்து விட்டது என்றும், அறிஞர்கள் யாவரும் இனிது கூறுவர்.

"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கில் தகையுடைய வாகிப்
புலமெலாம் பூத்தன தோன்றி. சிலமொழி!
தூதொடு வந்த மழை"

எனவரும் கார்நாற்பது என்னும் பதினெண் கீழ்க்கணக்கு நூற் செய்யுள், இவ்வுண்மையைச் செவ்விதின் உணர்த்தும். வராகமிகிரர்க்கு முற்பட்ட பழங்காலத்தில் நாண்மீன்கள் கார்த்திகையை முதலாகக்கொண்டு கணக்கிடப் பெற்று வந்தமைபற்றியே, கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாண்மீனைத் 'தலைநாள்' என மதுரைக் கண்ணங் கூத்தனார் சிறப்பித்துரைப்பா ராயினர். புத்தர்பிரான் தோன்றியருளிய விசாகநாளை, அசுவினி முதலாகக் கணக்கிட்டுப் பதினாறுவதாகக் குறிப்பிடாமல், 27 நாண்மீன்களுள் முன்னுள்ள பதின்மூன்றுக்கும் பின்னுள்ள பதின்மூன்றுக்கும் இடைநிலைப்பட்ட பதினான்காம் நாண்மீனாகக் குறிப்பிட்டு,

"இருதிள வேனில் எரிகதிர் இடபத்து
ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவயின்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்"

என மணிமேகலையிற் சீத்தலைச் சாத்தனார் பாடிச் செல்லுதலால், வராகமிகிரர்க்கு மிக முற்பட்ட அவர்தம் காலத்தில், கார்த்திகையே நாண்மீன்களுள் முதலாவதாகக் கொள்ளப்பெற்றிருந்த செய்தி தெளியப்படும். இவ்வாற்றாற் கார்த்திகையின் முதன்மையை உணரலாம். பிரமனும் திருமாலும் செருக்குற்று நின்றபொழுது அவர்கள் அடிமுடி காணாவகையில் இறைவன் பேரொளிப் பிழம்பாகத்தோன்றி நின்றதனையே கார்த்திகை விழா நினைவூட்டுவதாகப் புராணங்கள் கூறும். "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" என மாணிக்கவாசகர் திருவண்ணாமலையிற் பாடிய தம் திருவெம்பாவையினைத் தொடங்கியிருத்தலும் ஈண்டு நினைவுகூரத் தகும். வடநாட்டில் முதலிற் சமண சமயச் சார்புடையதாகத் தொடங்கிப் பின்னர் இந்து சமயத்தினர் என்போர் அனைவராலும் தழுவிக் கொள்ளப் பெற்றதாய தீபாவளி (விளக்கு வரிசை)த் திருநாள், தமிழ் நாட்டில் நெடுங்காலமாகத் தொன்றுதொட்டு

நிகழ்ந்துவரும் "கார்த்திகை விளக்கிட்டு விழா"வைப் போன்றதொன்றே யாகும்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் பாடியருளிய சோணசயில மாலையின்கண் 'பிறவிக் கடலைக் கடந்து முத்தியாகிய கரையிற் சேர விரும்புவோர், வழி தெரியாமையால் ஏற்படும் திகைப்பு நீங்கித் தமது தவவொழுக்கம் ஆகிய கப்பலை மேற்கொண்டு செலுத்தி உய்யும் பொருட்டு, ஒரு கலங்கரை விளக்கம்போல உயர்ந்தெழுந்து ஒளிதந்து விளங்குவது திருவண்ணாமலைக் கார்த்திகைத் தீபம்' என்னும் கருத்தது அமையப் பாடுகின்றார் :

" தவக்கற அறிந்த பிறக்கும்ஆ ருடும்
 துயர்ந்திடா தடைந்தகாண் மன்றும்
உவப்புடன் நிலைத்த மரிக்கும்ஓர் பதியும்
 ஒக்குமோ நினைக்குநின் கரைப்
பவக்கடல் கடந்த முத்தியங் கரையிற்
 படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கலம் நடத்த உயர்ந்தெழும் சோண
 சயிலனே கயிலைநா யகனே "

---

# சிவபிரானின் திருவடையாளம்*

(இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B. A.)

" குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்!மனம் என்கொல் புகாததே ?"

—திருநாவுக்கரசர்

இந்த இதழில் (1-10-61) பேராசிரியர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் "சிவபிரானின் ஒரு திருவடையாளம்" என்னும் தலைப்பில், இலிங்க வழிபாட்டின் தோடக்கத்தையும் வளர்ச்சியையும் குறித்து, வரலாற்றுக்கு முந்திய காலம் முதற்கொண்டு பல்லவர்களின்

---

*'A symbol of Siva' என்னும் ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம் : ந.ரா. முருகவேள்.

காலம் வரையில் ஆராய்ந்து, சிந்தனையைத் தூண்டுகின்ற கட்டுரை யொன்றனை வரைந்துள்ளார். அதன்கண்,

"இலிங்க வழிபாடானது ஆண்பெண் பாலுறுப்பு (சிசினம்)த் தொடர்புடைய தென்றும், அஃது ஆரியர்களின் காலத்திற்கு முன்பிருந்தே நிகழ்ந்து வருவதென்றும், இலிங்கத்தைப் பற்றி இலிங்கபுராணம் முதலியவற்றிற் காணப்படும் பௌராணிக—தத்துவ விளக்கங்களெல்லாம், சைவ சமயமும் சிசினவழிபாடும் ஒருங்கு கலந்தவிட்ட அருவருப்பினை மறைப்பதற்காகப் பிற்காலத்திற் செப்பனிடப் பெற்றவைகளேயாம்" என்றும், அவர் குறிப்பிடுவதாகத் தோன்றுகின்றது.

வரலாற்றுக்கு முந்திய காலத்தைப் பொறுத்தவரையில் சிந்துவெளிப் புதைபொருளாராய்ச்சிகளாற் கண்டு பிடிக்கப்பெற்ற குவிகற்கள் சிசினத்தைக் குறிப்பன என்பதற்குப் போதுமான சான்று ஏதும் இல்லை. எகிப்து முதலிய நாடுகளில் அக்காலத்தில் சிசின வழிபாடு நிகழ்ந்து வந்த செய்தி குறிப்பான் அறியக் கிடக்கின்றதாயினும், மிகச் சிறந்துயர்ந்த நாகரிகம் அடைந்திருந்த ஹாரப்பா நில மக்கள் சிசின வழிபாட்டுச் சடங்கு முறைகளைக் கைக்கொண்டிருந்தனர் என்று எண்ணுதற்கு இடனில்லை. மோகஞ்ச தாரோவில் யோகநிலையில் அமர்ந்திருப்பவரும், பசு முதலிய உயிரினங்களாற் சூழப்பட்டிருப்பவரும் ஆகிய கடவுள் 'பசுபதி' என வழிபடப் பெற்றமை தெளிவாகத் தெரிகின்றது. சிசின வழிபாட்டை வலியுறுத்தும் வகையிற் பேராசிரியர் சாத்திரியார் காட்டியுள்ளதும், இருக்கு வேதத்தில் வருவதும் ஆகிய 'சிசினதேவ' என்னும் தொடரினை முன்பெல்லாம் அறிஞர்கள் பெரிதுபடுத்திக் காட்டி வந்தனர். ஆனல் இப்பொழுது, அக் குறியீடானது சிசின வழிபாட்டினரைக் குறிக்கவில்லை என அறிஞர்கள் ஓரளவு தெளிவு பெற்றுள்ளனர். முதன் முதலில் கேல்ட்னர் என்பவர்தான் 'சிசினதேவ' என்பதனைப் பாலுறுப்பு வழிபாட்டினர் என்னும் கருத்தில் மொழி பெயர்த்தார். ஆனல் கிரிஃபெத்ஸ், ரோத் முதலியவர்கள், சாயனர் துர்க்காசாரியர் என்பவர்களின் பேருரைகளை ஆராய்ந்து பின்பற்றி, 'வேதச் சடங்குகள் நிகழும் இடங்களை அணுகுதற்குத் தகுதியற்றவராய்த் தூய்மையற்றுக் களித்து மயங்கும்

வெறியாட்டியல்பினராய இழிமக்களை, அத்தொடர் குறிப் பிடுகின்றிலது' என உணர்ந்து கொண்டனர்.

இருக்கு வேதத்தினை ஆழ்ந்தாராய்ந்து பயின்றுணர்ந்த பேரறிஞர்களான ஸ்ரீ அரவிந்தர், பேராசிரியர் பி. வி. காணே முதலியவர்களும் இங்ஙனமே கருதுகின்றனர். 'சிசின தேவ' என்னும் இருக்கு வேதத் தொடரானது, பாலுறுப்பைக் கடவுளாகக் கொண்டு வழிபடும் மக்களைக் குறித்தல் இயலாது எனப் பேராசிரியர் காணே அவர்கள், தரும சாத்திரங்களின் வரலாறு என்னும் தமது நூலின் இரண்டாம் தொகுதியில், இரண்டாவது பிரிவின் 708-ஆம் பக்கத்தில் விளக்கிக் கூறுகின்றார்.

சிவலிங்க வழிபாட்டைப் பற்றிய புராணங்கள் சிலவற்றிற் கூறப்படும் கதைகளைப் பேராசிரியர் விரிவாகமேற் கோள் காட்டியுள்ளார். எச். எச். வில்சன் என்பவர், தமது விஷ்ணுபுராண மொழி பெயர்ப்பின் முன்னுரையில், "இந்தியாவில் நிகழும் இவ்வழிபாட்டின் தொடக்கம் எங்ஙனம் இருந்திருந்த போதிலும், அதன் அடிப்படையான கருத்துக்கள், ஐரோப்பிய நூலாசிரியர்களின் தூய்மையற்ற இழிந்த கற்பனைகளின்படி, சைவ புராணங்களில் அமைந்திருத்தலை யாரும் காண்டல் அரிது" என நன்கினிது முடித்துக் கூறுகின்றார்.

கர்னல் வான்ஸ் கேன்னடி என்பவர், "இந்துக்களின் பழைய புராண கதைகள்" என்னும் தமது நூலில், "இலிங்கத்திற்கும் பாலுறுப்புக்கும் யாதோர் இயைபுமில்லை. எகிப்திலும் இந்தியாவிலும் இவ்வழிபாடு நிகழ்ந்தமைக்குரிய காரணங்கள் முதலில் ஒரேவகையாக அமைந்திருக்கக் கூடுமாயினும், கடவுட் பொருளைச் சுட்டிக் காட்டுதற்கெனவும் வழிபடுதற்கெனவும், எகிப்தியர்களாலும் இந்தியர்களாலும் கொள்ளப்பட்ட அடையாளப் பொருள்கள் தம்மிற் பெரிதும் வேறுபட்டனவாகும். இலிங்கமானது ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுவதில்லை. களிமயக்கம் வெறியாட்டம் என்பனவற்றால், அவ்வழிபாடு நிகழ்த்தப்படுவதன்று" எனக் கூறுகின்றார்.

இலிங்க வழிபாடு பற்றிய மகாபாரதக் கதைகளைக் குறித்து, இ. வாஷ்பர்ட்டன் ஹாப்கின்ஸ் என்பவர், தம்முடைய

‘இதிகாச புராண கதைகள்’ என்னும் நூலில், ‘துரோண பர்வத்தில் காணப்படும் நீண்ட பகுதியானது பிற்காலத்திற் சேர்க்கப்பட்ட இடைச் செருகலேயாம்’ எனக் கூறுகின்றார். அதனால் இப்பகுதிகள் சான்றாகக் கொள்ளத்தக்கன அல்ல.

தூயதும் சிறந்ததும் ஆகிய இலிங்கபுராணம் முதலியவற்றிலும் கூட, அர்ச்சய மேத்ரா என்னும் தொடர் வருகின்றதென்றும், அது சிசின வழிபாட்டுக் கருத்தை வலியுறுத்துகின்றதென்றும், சாத்திரியார் கட்டுரைக்கின்றார். பிற தெய்வங்களின் அங்கபூசை மந்திரங்களிலும்கூட, ஏனைய அங்கங்களுடன் மேத்ரா அங்கம் குறிப்பிடப் பெறுகின்றது. வழிபடு தெய்வத்தின் ஒவ்வோர் உறுப்பினையும், தெய்வநலம் சிறந்ததாகவே வழிபடுவோர் தம் கருத்திற் கொள்ளுதலால், இதன்கண் ஏதும் இழிவுக் குறிப்பு இருப்பதாகக் கூறுதல் அமையாது.

இனி, நாணயங்கள் சிலவற்றில் இலிங்கம் பொறிக்கப்பட்டுள்ள தொல்பொருட் சான்று பற்றி ஆராயுங்கால், வெளிநாட்டினின்று போந்த படை யெடுப்பாளர்களாகிய குஷானர்கள் சிவபிரானைத் தம் கடவுளர்களுள் ஒருவராக ஏற்றுக் கொண்டனர் என்பது யாவரும் அறிந்ததொன்று. நடு ஆசியாவில் நிலவி வந்த வழிபாட்டு முறையினைப் பின்பற்றி, இலிங்கமாகிய உருவை வடிவினைச் சிசினத்தோடு இயைபுடையதொன்றாக, அவர்கள் ஒருகால் பிறழ உணர்ந்துகொண் டிருத்தல் கூடும். இலிங்கத்தின் பக்கத்தில் காற்சட்டை யணிந்துள்ள நிலையில், மதுராநகர்ப் பொருட்காட்சிச் சாலையிலுள்ளனவெனப் பேராசிரியர் குறிப்பிடும் வடிவங்கள், இக்கருத்துக்குச் சான்று பகரும்.

ஏ. எல். பாஷாம் என்பவர், சாகர் - குஷானர்களின் படை யெடுப்புக்களின்போதுதான், காற்சட்டையானது இந்தியாவிற் கொணர்ந்து அறிமுகப்படுத்தப் பட்டதென்றும், அரச வகுப்பினரினிடையே குப்தர்காலம் வரையில் அது வழக்கத்தில் இருந்து வந்தது என்றும் கூறுகின்றார். எனவே, அயல்நாட்டுப் படை யெடுப்பாளர்களாலேயே, இப் பாலுறுப்புக் கூறு பிற்றை நாளிற் புகுத்தப் பெற்றதாதல் வேண்டும். அஃது ஆரியர்க்கு முற்பட்ட, சிந்து சமவெளியினர்க்குரிய வழிபாட்டு முறையின் ஓர் எச்சப்

பகுதியன்று. உருளைவடிவக் கல்லாலாகிய இலிங்கத்திற்கும் சிசினத்திற்கும் இடையேயுள்ள வடிவ வொப்புமையாலும், வடமொழியில் 'லிங்கம்' என்னும் சொல் ஆண் குறிக்கும் ஒரு பெயராக அமைந்து கிடத்தலாலும், இப்பெருங் குழப்பமும் மயக்கமும் விளைந்திருக்கக் கூடும். சிவபிரான் அலிங்கம் எனவும், ஸ்திரலிங்கம் எனவும் கூறப்படுதல் கொண்டு, இவ்வுண்மை தெளியப்படும். வேறு வகையான விளக்கங்கள் கூற முற்படுதல், பெரிதும் பிழைபாடுடைத்தே யாகும்.

குடிநியால்லம் சிலைபற்றித் திரு. டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் கூறுவது பொருந்துவதன்று. சிவபிரானைப் பரசுராமன்போன்ற நிலையில் அமைப்பதற்குச் சமய நூல்களிலோ சிற்ப நூல்களிலோ ஆதாரம் இல்லை. திரு. சி. வி. நாராயண ஐயர் அவர்கள், "தென்னிந்தியாவிற் சைவத்தின் தொடக்கமும் முதல்நிலை வரலாறும்" என்னும் நூலில், சிவலிங்கம் பற்றிய பகுதியில், இதுபற்றி மிகவும் விரிவாக ஆராய்ந்துள்ளார்.

இந்தியாவிற் சில இடங்களிற் காணப்படும் முகலிங்கங்கள், சிவபிரானின் அகோரம் தற்புருஷம் வாமதேவம் சத்தியோசாதம் ஈசானம் என்னும் முகங்களைக் குறிக்கின்றன. இதுபற்றிய விரிவான ஆராய்ச்சிக்குத் திரு. எம். ஆர். சகாரேயின் 'இலிங்க தாரண சந்திரிகை' என்னும் நூலை (பக்கங்கள் 303-324) யாவரும் ஆராய்ந்து காணலாம். அதன்கண் அவர், "சிவலிங்க வழிபாடானது, அதர்வண வேத சம்மிதையிற் பிரமப் பொருளைக் குறிப்பதாகப் பாடப்பெற்ற யூபஸ்தம்பம் (வேள்வித்தூண்) ஆகிய புகழ்மிகுந்த இலிங்கத்தினின்றே தோன்றியது" என ஸ்ரீசுவாமி விவேகானந்தர் அவர்கள் நிறுவியுள்ளதனை நன்கினிது எடுத்துக் காட்டியுள்ளார்.

சர். சார்லஸ் எலியட் என்பவர் "இந்து மதமும் புத்த மதமும்" என்னும் நூலில், "இலிங்கமானது பரம்பொருளின் படைப்பாற்றலை யுணர்த்தும் ஓர் அடையாளமேயாகும். இலிங்க வழிபாடு இழிந்த சடங்குகளோடு கூடியதன்று. மிகத் தூய்மையும் ஒழுக்கமும் வாய்ந்த இலிங்காயத வகுப்பினரால் கடைப்பிடிக்கப் படுதலொன்றே, இலிங்க வழிபாடானது அதன் தொடக்க நிலை

யிலும் கூடக் குறியியல் பற்றியதாக நிகழவில்லை" என்னும் உண்மையை வலியுறுத்துகின்றது என ஆராய்ந்து கூறி யுள்ளார்.

பதினெண் புராணங்கள் எத்துணைப் பழமை யுடையனவோ, அத்துணைப் பழமையிற் சிறிதும் குறையாத தமிழ்ச் சைவமும் தமிழ் இலக்கியங்களும் பொறுத்த வரையில், இலிங்கமானது சிவபிரானின் குறியியல் நிலையில் வைத்து வழிபடப் பெறுவ தென்னும் கருத்து, யாண்டும் ஒரு சிறிதேனும் குறிப்பாகவாதல் பெறப்படவில்லை. இலிங்கமானது சிவபிரானின் அருவுருவத் திருமேனி யாகவே போற்றப்படுகின்றது.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்"

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. தேவார ஆசிரியர்கள் சிவபிரான் சோதி வடிவில் உலகுக்குப் பெருந் தூணாகத் தோன்றியருளினர் எனவே விதந்து வியந்துபாடி யிருக்கின்றனர்.

எனவே, "தற்கால இந்துக்களின் உள்ளத்திலும் கோயிற் சடங்குகளிலும், இலிங்கத்தினையும் யோனியினை யும் இயைத்தெண்ணும் நிலை பொதுவாகப் பரவியிருக் கின்றது" எனச் சாத்திரியார் கூறுதற்கு ஆதாரம் எது வும் கிடையாது. அவர் எதனை அங்ஙனம் குறிப்பிடுகின்றார் என்பது தெளிவாகப் புலப்படவில்லை. இவ்வாற்றால், 'தத்துவத் தொடர்பின்றிச் சமயங்களின் தொல் பொருளா ராய்ச்சியைப் பிழையறத் திருத்தமும் செம்மையும் அமைய ஆராய்ந்தறிதல் இயலாது' என்னும் உண்மையே செவ் விதிற் றெளியப் படுகின்றது.

"எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்" —உண்மை விளக்கம்

—

## செய்திச் சுருக்கங்கள்

ஆண்டுவிழா: சென்னை இராயப்பேட்டை, ஸ்ரீ பாலசுப் பிரமணிய பக்த ஜன சபையின் 57-ஆம் ஆண்டு நிறைவு விழா, 1961 நவம்பர் 18, 19 தேதி சனி, ஞாயிற்றுக்கிழமை களில் மிகவும் சிறப்புற நடைபெற்றது. 18-ஆம் தேதி சனிக் கிழமை மாலை, திருமதி சௌந்தரம் கைலாசம் அம்மையார் அவர்கள் தலைமையில், திருமதி சரஸ்வதி அம்மையார் (திலகவதியார்), திருமதி கலைச்செல்வி அம்மையார் (இளையான்குடி மாறர்), குமாரி கௌரி குழுவினர் (முருகன் திருஅவதாரம்) ஆகியோர் சொற்பொழிவுகள் ஆற்றிச் சிறப்பித்தனர். 19ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை, தருமபுர ஆதீனம்–தவத்திரு–ஒடுக்கம்–வித்துவான் - ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் திரு. சி. என். சிங்காரவேலு முதலியார், அவர்கள் "தற்காலமும் சமய வாழ்வும்" என்னும் பொருள் பற்றியும், திரு. புலவர் முருகவேள், M. A., M. O. L. அவர்கள் "திருவாசகம்" என்னும் பொருள்பற்றியும் சொற்பொழிவு ஆற்றினர். சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A, L.T. அவர்கள் அன்று காலையும் மாலையும் சிவஞான போதப் பன்னிரு சூத்திரங்கள் குறித்தும் அரியதொரு விரிவுரை யாற்றி மகிழ்வித்தார்கள். சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், தலைவர் அவர்கள் வரச் சிறிதுகாலந் தாழ்த்தபோது, காலையும் மாலையும் தலைமை யேற்றுச் சிறப்புரைகள் வழங்கினார்கள். சபையின் செயவர் திரு. T. V. இரத்தின முதலியார் அவர்கள் ஆண்டறிக்கை வாசித்தார்கள். செஞ்சொல் மாமணி, திரு. ச. சிவகுமாரன், M. A. அவர்கள், அனைவருக்கும் சுவை மிக்க நன்றியுரை கூறினார்கள். கடவுள் வாழ்த்துடன் இரு நாட்களிலும் விழா இனிது நிறைவெய்தியது.

குருபூசை: ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் அவர்களின் 82ஆம் குருபூசைத் திருவிழா 29-11-1961 புதன் கிழமை காலை 9மணிக்குச் சிதம்பரம் மேற்கு வீதி உயர்நிலைப் பள்ளியில் சிறப்பாக நடைபெற்றது. அன்று மாலை 4 மணிக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. வி. சுப்பிரமணியம், M A., B.L. அவர்கள் தலைமையில்

திரு. மீ. ப. சோமசுந்தரம் (சென்னை வானொலி) அவர்கள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களின் அருமை பெருமைகளைக் குறித்துச் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீலஸ்ரீ நாவலர் அவர்களின் அறக் கட்டளைகளின் நற் பொறுப்பாளர் திரு. தி. க. இராசேசுவரன், B A. அவர்கள் அனைவருக்கும் நன்றியுரை கூறினார்கள். இறை வணக்கத்துடனும், தேசீய கீதத்துடனும் விழா இனிது நிறைவெய்தியது.

திருவிளையாடற் புராணச் சொற்பொழிவு : சென்னைப் பெத்துநாயக்கன் பேட்டை ஸ்ரீ காசி விசுவநாதர் திருக்கோயிலில், சென்னை அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில், 19-11-61 ஞாயிற்றுக்கிழமையன்று, ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில், திருமதி ஜெயகுமாரி பாஸ்கரன் அவர்களால் தொடங்கப் பெற்றது. அவ்விழாவில் திருமதி இராசரத்தினம் அம்மையார், M.A., L.T., திருமதி அனந்தநாயகி அம்மையார், B.A., B.L., M.L.A., திரு. புலவர் முருகவேள், ஆசிரியர் இளவழகனார் ஆகியோர் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர். செயலர் திரு. N. K. தருமலிங்கம் அவர்கள் நன்றியுரை நவின்றார்கள். பெருந்திரளான மக்கள் கூடியிருந்து விழாவைச் சிறப்பித்தமை குறிப்பிடுதற்குரியது.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலை: காஞ்சிபுரம் இராவ் பகதூர் கெ. சாம்பசிவ செட்டியார் அவர்கள், வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கு 20 ஏக்கர் நிலமும், ஒரு கடையும் நன்கொடை யளித்ததை முன்னிட்டு, அவர் தம் திருவுருவப் படத்தை 29-11-61 அன்று உலகப் பேரறிஞர் திவான் பகதூர் டாக்டர் சர். ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் திறந்துவைத்துப் பேசுகையில், அவர் பல நாடுகளில் தாம் பார்த்தவைகளிலிருந்தும், இந்தியாவில் பல மாகாணங்களைப் பார்த்ததிலிருந்தும், இந்துமத பாடசாலையைப் போல் இந்தியாவில் எங்கும் இல்லை என்று கூறி இதனை நடத்துபவர்களைப் பாராட்டினார்.

காஞ்சிபுரத்திலிருந்து நகராண்மைக் கழகத் தலைவர், ஆணையாளர், உறுப்பினர்கள், திரு. A. K. தங்கவேலு முதலியார், எம். எல். சி., அறிஞர் சி. என். அண்ணாதுரை,

எம்.ஏ., எம்.எல்.ஏ., நகராட்சி மன்றத்தின் முன்னாள் தலைவர்கள், பெரு வணிகர் பலரும் கலந்து சிறப்பித்தார்கள். செயலர் நன்றியுரையுடன் விழா இனிது நிறைவேறியது.

வடிவீசுவரம் - மெய்ந்நெறிக் கழகம்:—ஸ்ரீ மெய்கண்டார் குருபூசை விழாவும் மெய்ந்நெறி முப்பது நூல் வெளியீட்டு விழாவும் ஸ்ரீ அம்மாயி சுவாமி ஆலயத்தில் 8-11-61ல் நன்னெறி மன்றத் தலைவர் திரு C. வள்ளிநாயகம் பிள்ளை, B. A., B. L. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கழகத் தலைவர் M இராமையாப் பிள்ளை, B A. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். சைவப் புலவர் P. A. நடேச பிள்ளை, அறநெறிக் கழக அன்பர் M. V. சிப்பையன் ஆச்சாரி, நாஞ்சில் கவிஞர் ஈ. பாலப்பன், வித்துவான் சிவகுருநாத பிள்ளை, சித்தாந்த ஆசான் வித்துவான் இ. பகவதிப் பெருமாள் பிள்ளை முதலியோர், மெய்கண்டாரைப் பற்றியும், நூலைப்பற்றியும், நூலாசிரியரைப் பற்றியும் சிறப்பித்துப் பேசினர்கள். நூலாசிரியர் பாராட்டிப் பேசிய அன்பர்களுக்கு நன்றியுரை கூறத் தலைவர் முடிவுரைக்குப்பின் கழகத் தலைவர் நன்றி கூறினர்.

திருக்கடவூர்ச் சோமவாரப் பிரசாதம் வழங்கும் விழா:— 5-12-61 செவ்வாயன்று மாலை, சென்னை, தியாகராய நகரிலுள்ள தருமபுர ஆதின சமயப் பிரசார நிலையத்தில் நடைபெற்றது. அதுபோழ்து, சென்னை மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமை தாங்கித் திருக்கடவூர் சிறப்பினைப் பற்றியும், திருஞான சம்பந்தர் அருளிய கோளறு பதிகத்தின் முக்கிய கருத்துக்களையும் விளக்கி அரியதொரு உரை நிகழ்த்தினர்கள். ஒடுக்கம்-வித்துவான்-ஸ்ரீலஸ்ரீ. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரையும் கூறினர்கள். திரு. K. C. நாகலிங்க முதலியார் அவர்களால் அச்சிட்டு வழங்கப்பட்ட துன்பம் தவிர்க்கும் திருப்பதிகங்கள் அன்பர்கட்கு இலவசமாக வழங்கப்பட்டதுடன், அவரால் அளிக்கப்பட்ட சிற்றுண்டியையும் அன்பர்கள் பெற்று மகிழ்ந்தார்கள். பின்னர் திருக்கடவூர் விபூதிப் பிரசாதமும், தீர்த்தமும் வழங்கப்பட்டுக் கூட்டம் இனிது முடிந்தது.

புரசைத் திருநெறிக் கழகம் 10-ம் திங்கள் வழிபாடு :— 17-12-61 ஞாயிறன்று தொண்டை நன்னாட்டின் 28-வது தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் நடைபெறும். வழிபாட்டன்பர்கள், 16-12-61 இரவு 8-மணிக்குச் சென்னை, புரசை, வைக்கோற்காரன் தெருவிலுள்ள வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து பேருந்தூர்தி (பஸ்) மூலம் செல்ல ஏற்பாடாகியுள்ளது. 17-12-61 காலை சங்கு தீர்த்தத்தில் நீராடி, திருமுறை முழக்கத்துடன் மலை வலம் வந்து, மலை ஏறுதலும் ஆங்கு வழிபாடும் சொற்பொழிவுகளும், மாலை 4-மணிக்குத் தாழக் கோயிலில் வழிபாடும் சொற்பொழிவுகளும் நடைபெறும்.

வேண்டுகோள் : திருவள்ளுவநாயனார் கோயில் திருப்பணி, அவர்கள் அவதரித்த திருமயிலையில் நடந்து வருகிறது. அதற்கு நன்கொடை அனுப்ப விருப்பப்படுவோர் "திரு. P. G. நடராஜன், நிர்வாக தர்மகர்த்தர், ஸ்ரீதிருவள்ளுவ நாயனார் ஆலயத் திருப்பணி, மயிலாப்பூர், சென்னை-4" என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## மதிப்புரை

"இந்து இளைஞன்": என்ற மாதசஞ்சிகை கொழும்பு இந்து வாலிப சங்கத்தினரால் வெளியிடப்பட்டு வருகிறது. அதில் ஆங்கிலக் கட்டுரைகளும் மேல் நாட்டுச் சஞ்சிகைகளின் அனுமதி பெற்று வெளியிடப்படுகிறது. பிழையின்றி வெளியிடப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் அதில் பிழைகள் கண்டுபிடிப்பவர்களுக்குப் பரிசும் வழங்கப்படுகிறது. வருட சந்தா ரூபா 2/-இரண்டுமட்டும்தான் எனினும் நல்ல தாளில், அறிஞர்களால் எழுதப்படும் சமயக் கட்டுரைகள் இந்த சஞ்சிகையில் வெளியிடப்படுகின்றன. இளைஞர்கள் வெளியிடும் பத்திரிகையெனினும் முதியோர்களும் படிக்கவேண்டிய உயரிய கட்டுரைகளும் இதில் வெளிவருகின்றன. சிலோனுக்குப் பணம் அனுப்ப முடியாத இந்திய அன்பர்கள் சந்தாவைக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பி "இந்து இளைஞன்" பெறலாம். "14-வாரன் சாலை, மயிலாப்பூர், சென்னை-4" லுள்ள மா. ப. தியாகராஜன் B. A. அவர்களுக்கு ரூ. 2/- அனுப்பி இந்து இளைஞனைத் தருவித்துக்கொள்ளலாம்.

## சமாஜத் தேர்வு முடிவுகள்

நமது சமாஜத்தின் சார்பில் இவ்வாண்டு நடைபெற்ற சைவப் புலவர், இளஞ் சைவப் புலவர் தேர்வுகளில் கீழ்க் குறித்துள்ளவர்கள் தேர்ச்சி பெற்றுள்ளனர். இளஞ் சைவப் புலவர்: பி. என். பாலசுப்பிரமணியன் (இரண்டாம் வகுப்பு); க. நா. சிவசுப்பிரமணியப் பிள்ளை (மூன்றும் வகுப்பு). சைவப் புலவர் : வ. கந்தசாமி (இரண்டாம் வகுப்பு); க. கணபதிப் பிள்ளை (இரண்டாம் வகுப்பு); ந. இராமமூர்த்தி (மூன்றும் வகுப்பு).

## சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடுகள்



Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil St..., Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.